நூல் தயாரிப்புக்குழு: கா.சி.வின்சென்ட், அரசு கார்த்திக்

வெளியீடு: ஆரா பிரஸ், சென்னை

பதிப்பாசிரியர்: அன்பரசு சண்முகம்

வெளியீட்டு அனுசரணை: Komalimedai.blogspot.com

தொடர்புக்கு: arapress@protonmail.com

அட்டைப்படம்: pixabay

அட்டை வடிவமைப்பு: பிக்சல் பக்கெட்

அட்டை வடிவமைப்பு உதவி: Canva.com

அன்பு உறவுகளுக்கு,

வணக்கம். இந்த புத்தகத்தை தி.ஜா., மௌனி, பிரமிள் ஆகியோரை படித்துவிட்டு, அவர்களை முகவரியாக வைத்து எழுதவில்லை. இதை எழுதக்காரணம் எனக்கு கிடைத்த சகோதரரது கடிதங்கள். அவற்றை வைத்து சிலவற்றை புனைந்து எழுதிய கதை இது. இதற்கான எதிர்வினைகளை நூலின் பின்னாடியே கொடுத்துள்ளேன்.

பள்ளி, கல்லூரியில் படிக்கும் ஒருவனது வாழ்க்கைதான் கதை. இதில் அவன் பார்த்த விஷயங்களை யதார்த்தமாக பதிவு செய்ய முயன்றிருக்கிறேன். வெற்றி பெற்றேனா என்று சொல்லமுடியவில்லை. அதனை படித்தபிறகு நீங்கள்தான் சொல்ல வேண்டும். எதிர்பார்ப்பின்றி வாசியுங்கள். பிடித்திருந்தால் அதனைப் பற்றிய கருத்துகளை எனக்கு மின்னஞ்சல் செய்யுங்கள் நன்றி.

குமார் சண்முகம்
அன்பரசு சண்முகம்

arapress@protonmail.com

லவ் இன்ஃபினிட்டி அறிமுக உரை

இந்த நூலைப்படிக்கும்போது உங்களுக்கு உங்களுடைய பள்ளி மற்றும் கல்லூரிப்பருவம் நினைவுக்கு வரக்கூடும். இக்கதையில் வரும் சம்பவங்கள், இடங்கள் அனைத்தும் நிஜம்தான். ஆனால் உண்மையும் புனைவுமான காட்சிகள் அதிகமாக உள்ளன. அவை எவையென்று வாசிப்பு வழியே நீங்களே உணர்ந்து கொள்வீர்கள் என நம்புகிறேன். இது குறிப்பிட்ட ஒருவரின் வாழ்வைச் சுற்றி வந்தாலும், நாம் அனைவரும் சந்திக்கும் மனிதர்களே இக்கதையில் தென்படுகிறார்கள்.

இதனை கோமாளிமேடை வலைத்தளத்திலும், அதேசமயம் பிரதிலிபி தளத்திலும் எழுதி வந்தபோது, ஏராளமான விமர்சனங்கள் பெண்களை மையப்படுத்தியே வந்தன. பெண்கள் தங்களின் பாலுறவுக்கான துணையை தேடுவது என்பது நகரங்களில் இயல்பு என்றாலும் கிராமங்களில் குறுநகரங்களில் சாத்தியம் இல்லை. அந்தளவு வெளிப்படைத்தன்மையான ஆண்கள் அங்கு இல்லையென்று கொள்ளலாம். ஆண் செக்சைப் பற்றி பேசுவதை சமூகம் ஏற்கிறது. அதையொத்த பேச்சுகளை பெண் பேசினால் அவளை ஒழுக்கப்படுகொலை செய்கிறது. இதில் வரும் பிருந்தா, சுமதி, மைதிலி என மூவருமே மூன்றுவிதமான குண அமைப்புகளைக் கொண்டவர்கள். சுமதி, பிருந்தா ஆகியோர் குறுநகரங்களில், கிராமங்களில் வாழ்ந்தாலும் தன்னைச் சுற்றி நடக்கும் விஷயங்களை புரிந்துகொண்டு அதற்கேற்ப வாழப்பழகியவர்கள். ஆனால் மைதிலி மனக்குழப்பத்தில் உள்ள கதாபாத்திரம். பிரதிபலன்றற அன்பானாலும் அதை சந்தேகித்தே பழகியவள். அவளின் குடும்பம், வாழ்முறை அதைப் பழக்கியிருக்கலாம்.

இதைப்படித்த என் நண்பர் அவரது வாழ்க்கையைப் போலவே இருக்கிறது என்றார். அவரது வாழ்க்கையை சற்று காலதாமதமாகவே அறிந்தேன். நான் இக்கதையில் எழுதியதை விட கெட்ட ஆட்டம் போட்டார். இப்போது போட்டுக்கொண்டிருக்கிறார். ஒருவன் வாழ்க்கையில் சந்திக்கும் பெண்களால் கற்றதும் பெற்றதும் என்ன என்பதே இக்கதை பேசுகிறது. நன்றி.

குமார் சண்முகம் — அன்பரசு சண்முகம்

உள்ளே.....

*சோறு முக்கியம் ப்ரோ!*

*இதயத்தை உடைத்தேன்!*

*மன் கீ பியார்!*

*காதலே சுவாசம்!*

*1*

*லவ் இன்ஃபினிட்டி*

***நட்பதிகாரம் 1***

*நான் என்னைப் பத்தி எப்படி அறிமுகப்படுத்திக்கிறது? எம்பேரு மோகன். ஊரைவிட்டு தள்ளி கோயில் வரி கூட வாங்க வேண்டாம்னு சொல்லி ஒதுக்கிவைக்கப்பட்ட குடும்பம் எங்களோடது.*

*எங்களோடதுன்னா நாங்க ஆதி திராவிட ஆட்கள், குறவர்கள்னு இருநூறு வீடுகள் கொண்ட கூட்டம் நாங்க. எங்களுக்கு கொண்டாட்டங்கிறது எங்க சாதி சனத்தோடு இருக்கிறதும். கோழி, ஆடு வெட்டி சலிக்கத் திங்கிறதும்தான். மாடு வெட்டினா அதை உப்புக்கண்டம் போட்டு வெயிலில் காய வெச்சு சாப்பிடுவோம். வேலையில்லாதபோது இதுதான் எங்க சாப்பாடு, வெயிலில் காஞ்சு, மழையில நனைஞ்சு முளைச்சு எழும்பறதுதான் எங்க வாழ்க்கை.*

*என்னோட லைஃப் இன்னைக்கு நல்லா இருக்குன்னா அதுக்கு நான் என் வாழ்க்கையில் சந்திச்ச நிறைய மனிதர்கள்தான் காரணம். அதிலேயும் பெண்கள் முக்கியமானவங்க. எங்க ஊரே சாதி பார்த்து, கோயில் குளம் கேட்டு பழகறதால, எனக்கு ஃபிரெண்ட்ஸ்னா அது வீட்டுக்குள்ள பொழங்க விடாத சாதிக்காரங்கதான். ஏன்னா, அவங்கதான் எப்பவும் எங்கூட எங்க பக்கத்துலயே இருக்காங்க. கவுண்டர் வீட்டு ஆளுங்க வேலைக்கு சர்க்கரையா பேசுவாங்க . வேல முடிஞ்சதும் கூலி கூட கொடுக்காம ஏமாத்துவாங்க.*

*அவங்க நாற குணத்திற்கு அங்க நட்பா இருக்கமுடியுமா? அப்பனுக்கு புள்ள தப்பவே தப்பாது. நல்லா இருக்கிறவனும் கூட இருக்கிறவனப் பாத்து கத்துக்கிறான். அப்புறம் எப்பவும் போல நாம சாதி மனித தன்மையற்ற செயல்னு கவர்மென்ட் பிரசுல அச்சடித்து ஊரு முழுக்க கொடுத்துட்டே இருக்க வேண்டியதுதான். இப்படி இருந்தும் எனக்கு படிக்கறக்கு வாய்ப்பு கிடைச்சுது.*

*இலவசக் கல்விதான். வாழ்க்கைய மாத்தினதே அந்த இடம்தான். நான் சொல்லப்போறது என்னோட வாழ்க்கையப் பத்தி… அதுல நான் சந்தித்த சில விஷயங்களைப் பத்தி…. கல்லூரி வாழ்க்கை தொடங்கியது. அப்போதுதான் மைதிலியைப் பார்த்தேன். என்னமோ தெரியல. அவ கண்ணுல*

தெரிஞ்ச பயமே எனக்கு ரசிக்க வெச்சுது. நான் ரொம்ப அலட்டலான ஆளும் கிடையாது. அமுக்கு மூஞ்சியும் கிடையாது. இலகுவா இருப்பேன். பேசினா பேசுவேன். அதுக்காக யாருகிட்டேயும் கூஜா தூக்கிட்டு திரியறவன் கிடையாது.

மொதல்ல பேசும்போது அவ பேசுல. அப்புறமும் வெளிலதான் பேசுவா. அப்ப நோட்டுக்ல எழுதி பேச ஆரம்பிச்சோம். அதுவும் என்னோட ஐடியாதான். அந்த மொட்ட வேலங்காட்டுக்குள்ள இருந்த காலேஜ்ல ஒரே சந்தோஷம் அவதான்.

எனக்கு அப்போ ரொம்ப பிடிச்சது, பிடிச்சவங்களுக்காக கடிதம் எழுதறது. அப்படி எழுதின கடிதங்களில் இதுவும் ஒண்ணு.

16.7.2002

செல்வா எங்க வீட்டுக்கு வந்தான். சந்தோஷமாக இருந்தது. நீ Yuvaraj கிட்ட எதுக்கு பேசின! எனக்கு சரியான கோபம். Tension ஆயிட்டேன். என்னால நீ யார்கிட்ட பேசினாலும் பிடிக்காம போயிடுது ஏன்னு தெரியல. நீ என்கிட்ட மட்டும் பேசணும்னு நினைக்கிறது தப்புதானே?

யதார்த்தம் தெரிந்தபோதும் I Can't Control Myself. நீ யாரையுமே Love பண்ணலைன்னு தெரிஞ்சப்பவே ஏதோ வானத்துல பறக்கிற மாதிரி இருந்தது. நீ Phone பண்ண நினைத்தாய் என்றால் சுதாகர் வீட்டுக்கு பண்ணு. நம்பர் 24853—914204. leave நாளில் மத்தியானத்துக்கு மேல அங்கதான் இருப்பேன். ஏதாவது முக்கியம்னா பண்ணு. சுதாகரின் அக்கா பேரும் உன்னுடைய பேரும் ஒண்ணுதான். அவங்க அக்கா பேரு கவிதா எப்படி?

நீ இப்போ ஒரு Gold Chain போட்டிருக்கிறாய். அது ரொம்ப ரொம்ப அழகா இருக்குது. நீ மூக்கும் முழியுமா அழகா இருக்கே. சுருக்கமாக நீ ரொம்ப அழகா இருக்கே!

எனக்குப் புடிச்ச Songs
"தொட்டுத்தொட்டு செல்லும் ஐஸ்காற்றே" (ஏய் நீ.ரொ.அ.இ)
"வத்தல குண்டு வெத்தல கொடியே"
"ஆல்தோட்ட பூபதி நானடா"
அப்புறம் துள்ளுவதோ இளமை , பஞ்சதந்திரம் பார்த்துட்டேன். து.இ நல்லா இருந்தது. ஷெரீன் So Sweet.

முக்கியமான Matter

S.பூங்கொடி வீட்டுக்கு நம்ம Class பொண்ணுங்க பொங்கலுக்கு போயிருக்காங்க. அங்க Roopa வை பார்த்து, நான் உங்கிட்ட பேசறது, பழகறது எல்லாம் சொல்லியிருக்காங்க.
போனவாரம் நான் College விட்டு வந்தப்ப பஸ் stop ல் Roopa நின்னுது. வீட்டுக்கு கூட்டிட்டு போனேன். ஒரு அரைமணிநேரம் இருந்த து. நான் உங்கிட்ட பேசாம இருக்கணும். ஒழுங்கா இருக்கணும் நல்லாப்படி அப்படி இப்படின்னு சொல்லுச்சு. உன்மேல வெறுப்பு மாதிரி நம்ம Class பொண்ணுங்க நிறைய சொல்லியிருக்காங்க.
நீ ஒரு Book கொடுத்தாய். அந்த Story ரொம்ப நல்லாயிருந்தது.

“தொடாமல் மலர முடியாது.
காற்று தென்றல் காற்று
தொடாமல் மலர முடியாது
மலரலாம் ஆனால் மௌனமாக”

வினயா, ப்ரணவ், அஜய் எல்லாம் Original கதாபாத்திரங்கள் மாதிரி நம்ம Life ல் நடந்தது போல இருந்தது. கண்டிப்பா வினயா = நீ. கடைசியா சொல்றா வினயா. ஒரு பொருளை ஒரு பொண்ணை விரும்பற உரிமை யாருக்கும் உண்டு. அது கிடைக்காம போனாலும் நாம எப்பவும் போல இருக்கணும்னு பேசறா. I Like This Lines.

Kavi எனக்கு Dress எடுத்து கொடுத்துது. நிறைய Advise பண்ணிச்சு. College விட்டு வந்ததிலிருந்து தேங்காய் கூட சுடாமல் (இன்னிக்கு ஆடி1) உனக்கு Lr எழுதறேன். இன்னிக்கு Maths Tutuion போகலை. Tuition போனா வீட்டுக்கு வர நைட் 9.50 ஆயிரும். வர வர இந்த College Life Very Torchure. ச்சேன்னு இருக்குது.

இந்த Note ல் நான் ரெட் கார்ட்டில் பூ ஒன்று வைத்துள்ளேன். பத்திரமா வெச்சிரு. இந்தப்பூ எனக்கு ரொம்ப பிடிக்கும். மோகனாவுக்கு பிடிக்குமான்னு கேட்டுப்பாரு. என்னோட குணநலன்(?) ஏதாவது மோகனாகிட்ட இருக்குதா? என்னோட Taste ஏதாவது இருக்குதா? பார்!

நீ வேணா மோகனா Birthday அன்னிக்கு Leave சொல்லிட்டு 'M' வீட்டுக்கு வர்றியா. நீ வர்றமாதிரி இருந்தா நானும் வர்றேன்.

***நட்பதிகாரம் 2***

*நான் பழகின நிறைய பெண்கள் எங்கம்மாவோட பிரெண்ட்ஸ். எல்லாமே கூலி வேலைக்குப் போறவங்கதான். செக்ஸ் உட்பட அத்தனையையும் பளிச்சுன்னு ஏடாகூடமா பேசறதுதான் அவங்க வேலையே. பல வருஷமாக அக்கா, அண்ணன்னு சொல்லாம ஆம்பளை, பொம்பளைன்னுதான் பேசிக்கிட்டேருந்தேன். அதை புதுப்பாளையம் சுரேஷ் அண்ணன் மாத்துனாரு.*

*ஈரோடு பஸ் ஏறினா, காளைமாட்டு சிலைன்னு டிக்கெட் வாங்கறதுதான் எனக்குத் தெரியும். காளைமாட்டு சிலைன்னு சொல்லாம ஈரோடுன்னு சொன்னாவே போதுங்கிறதெல்லாம் அனுபவத்துல வந்ததுதே. இதுவே இவ்வளவு கொழப்பமாக இழுத்துதுன்னா.. பெண்களோடு அதுவும் என் ஒரே வயசு இருக்கிற  பொண்ணோட பேசறது எவ்வளவு கஷ்டம்.*

*எனக்கு பேசறது பிடிக்கும். ஆனா தொடங்கணும். தமிழ் போர்டுல படிச்சிருந்தா பரவால்ல. இங்கிலீஸ்னா , அடைச்ச கடைல உடைச்ச சோடா கேக்க வந்துட்டோம்னு அர்த்தம். பள்ளிக்கூடத்துல ஜடைய இழுத்து துளசி மணிகிட்ட வம்பு பண்ணினது, மோகன சத்யாவை பின்னாடி தட்டி கூப்பிடறது, பேனு தலைச்சின்னு சத்தியப்பிரியாவை நக்கல் அடிக்கிறது, பிருந்தாவை பருந்தான்னு சொல்லி வெறி ஏத்தறதுன்னு வேறலெவல்ல அலைஞ்சிட்டிருக்கேன்.*

*ஜாலியா சந்தோஷமாக இருக்கணும். நோ ரூல்ஸ். என்ன கவுண்டரூட்டு பிள்ளைகிட்ட எதுவுஞ் சொல்ல முடியாது. அடுத்தநாளு, அவங்கப்பன் சாட்டைக்கம்போட ஹெச்எம் ரூமுக்கு முன்னாடி கண்ணு செவக்க நிப்பாரு. இதெல்லாம் தேவையா?*

*பள்ளிக்கூடத்துல நிறைய விஷயங்களை தெரிஞ்சுக்கிட்டேன். காலேஜ் வேற விஷயங்களைச் சொல்லித் தந்தது. ஆனா காலேஜூ வேற விஷயங்களைச் சொல்லித் தந்துது. அதையும் நான் லெட்டராக எழுதி வெச்சிடுவேன். ஞாபகத்துக்குத்தான்.வேற ஒண்ணுமில்லை.*

மகாதேவி கிட்ட general Knowledge papers கொடுத்தேன். அது கேட்டது. அது முடிச்சவுடனே உன்கிட்ட கொடுக்கச் சொன்னேன். நீ அதைக் கேட்டு வாங்கிக்கொள்.

இன்னிக்கு உனக்கு தலைவலியா? நலம் விசாரிக்க கூட என்னால் முடியலை. உடம்பைப் பார்த்துக்கொள். அடிக்கடி இறைவனை நினைக்கப் பழகு. எல்லாப் பிரச்னைகளையும் அவர்கிட்ட விட்டுடு. அப்புறம் நான் ஒண்ணு கேட்பேன். கொடுப்பியா?
Prescription நோட்டு ஒண்ணு வேணும். கவிதையெல்லாம் எழுதி வைக்கிறதுக்கு. டைரி பத்த மாட்டேங்குது. நீ வெச்சிருந்தா கொடு!

அப்புறம் தபூ சங்கர் கவிதை படிச்சுப்பாரு. உன்னை தொந்தரவு பண்ணின மாதிரி இருந்தால் மன்னித்துவிடு. உன்னை விட்டால் வேறு யாருக்கு நான் Lr எழுத முடியும்? இப்படி பக்கம் பக்கமாக எழுதியதை நீதான் அங்கீகரித்து பத்திரப்படுத்துகிறாய்! You're Great Friend in My life.

கடைசியா நம்ம கவி Marriage, உன் Marriage க்கு எல்லாம் நான் பெரிசா Gift பண்ணனும். அப்படின்னு மனசில் ஆசை. அதுக்குள்ள பெரிய ஆளா வந்துட்டா பெரிய அளவில் Gift பண்ணுவேன். கவிகிட்ட சொன்னேன். ஒரு Bookலிருந்த வளையலைக் காட்டி இதுபோல வாங்கித்தருவேன்னு சொன்னேன். அதுக்கு கவி சிரிச்சிக்கிட்டே இது Fulla diamond அப்படின்னுது. ஏன்? diamond உனக்கு வாங்கித் தர மாட்டேனா? என்றேன். வாங்கித்தா பார்க்கலாம். என்று சொன்னது. ஆனால் முடிஞ்ச வரைக்கும் அதுக்கும் உனக்கும் Diamond வாங்கித்தரணும். பார்க்கலாம். அப்போ நான் என்ன நிலைமையில் இருக்கிறேனோ? இப்போ மணி 8.35 எல்லாத்தையும் கொட்டிட்டேன்.

வெட்டிவேறு வாசம் பாடல் கேட்டுக்கொண்டு இருக்கிறேன். நான் வேற LOVE போதையில் உன் மனதை காயப்படுத்தியிருந்தால் என்னை மன்னித்துவிடு. உன் Gange ல் எல்லாரும் உன்கிட்ட Love ன்னு டார்ச்சர் பண்றாங்க. நானும் வேற. Sorry Sorry. ஒரு நாள் சாரி கட்டிட்டு வா. நிறைய எழுத முடியல. Next Time பார்க்கலாம்.
அன்புள்ள
மோகன்

லெட்டரை எழுதிய பிறகுதான் நிம்மதி. அப்பாவுக்கு ஒன்பது மணிக்கு மேல் லைட் எரிந்தாலே கோபம் வந்துவிடும். யாரு

கரண்டுக்கு காசு கட்டறது? பகல்ல எழுதி படிக்கலாமுல்ல என கொந்தளிப்பார். அவர் நன்றாக தூங்கி சிறுநீர் கழிக்க பதினொன்றரை மணிக்கு வருவதற்குள் எழுத்து வேலைகளை முடித்துவிடுவேன். இல்லையா, கோவிலருகே எரியும் தெரு விளக்கை நம்புவதுதான் ஒரே வழி. இதை மனதில் நினைக்கும்போது பிஸ்கெட் தொழிற்சாலை வேன் வேகமாக முக்கில் திரும்பி வந்துகொண்டிருந்தது. எங்கள் வீட்டு நாய் வேறு குஷியாகி என் இடுப்பில் தொற்றுக்கால் போட்டு விளையாட அழைத்தது. அதன் கால்களை கீழே எடுத்துவிட்டு அதன் தலையைத் தடவிக்கொடுத்தேன். கண்ணை மூடி தடவலை ரசித்தது. விளக்கை அணைத்துவிட்டேன்.

*3*
*லவ் இன்ஃபினிட்டி*

## பொண்ணைத் தேடறது எவ்ளோ கஷ்டம் தெரியுமா?

*நீங்க திடீர்னு லவ் பண்றீங்க. அப்போ உங்க மைண்ட்ல ராஜா சார் மியூசிக், பப்பி லகரியோட கிளப் சாங், ஏ.ஆர். பிஜிஎம் எல்லாமே சிச்சுவேசனுக்கு வந்து போகும். ஆனால் இங்க நீங்க ஒண்ணை கவனிக்கனும்.*

*லவ் பண்றவங்களுக்கு வேண்ணா அவங்க இரண்டாம் உலகத்தில் இருக்கற மாதிரி தோணும். ஆனா அவங்கள* Friends, Parents *எல்லாம் அத்தனை கூத்தையும் பார்த்துக்கிட்டு ஆடுறா ராசா ஆடு என காலண்டரில் கணக்கு போட்டு காத்திருப்பார்கள்.*
*கஷ்டப்பட்டு சாதி பிரச்னை இல்லாம ஒரு பொண்ணை நம் மனசுக்கு புடிச்ச மாதிரி செலக்ட் பண்றது இருக்கே, அது எவ்வளவு கஷ்டம்னு தெரியுமா? அந்த நேரத்திலதான் கில்டி குணா வந்தான். இவன் பிரச்னை, மூணு வேளைக்கு முப்பது முட்டையைத் திங்கிறதுதான்.*

*மைதிலி மாதிரி ஊரே ஆச்சரியப்படுற செவப்பான புள்ள எங்கு சொந்தத்திலேயே கிடையாது. எப்படியாவது இவளை கல்யாணம் பண்ணிட்டன்னா எனக்கு குடியரசுத்தலைவர் கைல விருது வாங்குனா மாதிரி. நமக்கு புடிச்ச மாதிரி பூமெக்ஸ் ஜட்டி கூட கெடைக்க மாட்டேங்குது. இந்த நேரத்துல இது செவ செவன்னு ஒரு புள்ள, நம்முகிட்ட பேசுதுன்னா நாம கெத்துதான?*

*அந்த ஒரு காரணத்துக்காகவே கில்டி குணாவுக்கு ஆம்லெட் ஆஃபாயில் வாங்கிக்கொடுத்து* Friend *ங்கிற பேர்ல செக்யூரிட்டியா வெச்சிருந்தோம். நான்னா, ஸ்ரீராம், செல்வா, யுவராஜ் எல்லாரும்தான். பசியா இருக்கும்போது குணா, நம்மளோட குற்றவுணர்ச்சியைத் தூண்டறா மாதிரி, என்னைக்கோ குடுத்த வாக்குறுதி, சரக்கு அடிக்கும்போது பேசின வீராப்பு மேட்டரையெல்லாம் எடுத்துப் பேசுவான். உதவி செய்யிலீன்னா செருப்பு எடுத்து மண்டையிலேயே அடிப்பான். நமக்கு வலிக்காது. ஏன்னா, அவன் மண்டைல அவனே அடிச்சிக்கிட்டா நமக்கு எப்படிங்க வலிக்கும்? குற்றவுணர்ச்சியை தூண்டறா மாதிரியே நடந்துக்குவான்.*

ஆனால் வயிறு நிறைஞ்சா அவன மாதிரி நல்ல Friend யாரும் கிடையாது. ஆனாலும் ஒருநாள் மைதிலியை Bitch அப்படின்னு சட்டுன்னு சொல்லிட்டான். செல்வா, யுவா எல்லாரும் என்னைப் பார்த்து கமுக்கமாக சிரிச்சாங்க., ஆணழகன் விருது வாங்கினவன்னு கூட பார்க்காம குணா வாயிலேயே குத்தினேன். குணா பல்லுல ரத்தம் வந்திருச்சு. அவன் முறைச்சிட்டே போயிட்டான். நன்றியுள்ள நாய் அவன்.

மைதிலி, பயங்கரமா அலட்டிக்கிறாளே? எனக்கு அவ அந்தஸ்துதான். ஆனா அவளுக்கு நான் செக்யூரிட்டியாக இருக்கணும். சோறு போடணும். பேங்க் பேலன்ஸ் வெச்சிருக்கணும். நைட்டு திருப்தியா உடம்புக்கும் பசியாத்தணும். பொம்பளைன்னாத்தான் கஷ்டம் இருக்கணுமா என்ன?

எனக்கு இந்த love ஜெயிக்குதோ இல்லையோ, இந்த எக்ஸ்பீரியன்ஸ் எனக்கு முக்கியம். அது ஒரு த்ரில் இல்லையா? என்னோட ரத்த சம்பந்தமில்லாத ஒரு மனசு, உடம்புக்குள்ள துடிச்சிட்டிருக்கு அப்படின்னா சும்மா ஜிவ்வுன்னு ஒரு பரவசம் மனசுக்குள்ள பரவுதே... அது ஏன்? அது எனக்கு எப்பவும் வேணும்.
Ambika முதலில் என்னை பிராக்கெட் போட பார்த்தா. என்னென்ன சிக்னல்லாம் கொடுத்தா. நாம ட்ரை பண்ணி அது நமக்கு கிடைச்சாத்தானே வேட்டை ருசிக்கும். இல்லையா? ஜெயிச்சப்புறம் வர்ற வெறுமை எனக்கு பிடிக்காது. ஆப்பிள்ல நான் வாஷிங்டனை செலக்ட் பண்ணுவேன். சிம்லா மாதிரி எப்பவும் கிடைக்கிறதுல எனக்கு ஆர்வம் இல்ல.

மனுசனுக்கு ரெண்டு விஷயம் எப்பவும் பிடிக்கும். ஒண்ணு ஒருத்தரை கன்ட்ரோல் பண்றது. இல்ல, ஒருத்தரோடு கன்ட்ரோல்ல இருக்குறோம்னு நம்ப வைக்குறது. பொண்ணுங்ககிட்ட இந்த ரெண்டையும் மாத்தி மாத்தி செய்யணும். ஃபார்முலா ஒண்ணுதான். ஆனா இதை தகுதியான ஆட்கள் கிட்ட அப்ளை பண்ணா ஹிட்டாகும். இல்லனா 12 பி படம் மாதிரி பாட்டு சூப்பரா இருக்கும் ஆனா படம் டக் அவுட் ஆகிடும். . ஆனா இதுல நான் லவ் டெரரிஸ்ட்தான்.

*4*
*லவ் இன்ஃபினிட்டி!*

***என்னை நம்பு பொன்கிளியே!***

*பொண்ணுககிட்ட எனக்கு பிடிக்காதது இதுதான். தான் ஜெயிக்க முடியாதுன்னு தெரிஞ்சா அவங்க எடுக்கிற ஆயுதம் மௌன ஒத்துழையாமை இல்லீன்னா கண்ணீர். இதைவிட அணு ஆயுதம் கூட எதையும் சாதிக்க முடியாதுன்னுதான் நினைக்கிறேன். அத்தனை விஷயங்களை உலகம் முழுக்க இந்த ரெண்டு மேட்டரும் சாதிச்சிருக்கு. செல்லக்குட்டி மைதிலி அதில் வித்தகி. கௌரவ டாக்டர் பட்டம் கூட கொடுக்கலாம். காதலிக்கிறதுகூட பிரச்னையில்லை. ஆனால காதலிக்கிற பொண்ணுன்னா, ஆம்பளைக்கு புத்திமதி சொல்லியே ஆகணும்னு அடம்பிடிக்கிறதுதான் முடியல .*
*மூஞ்சிய பார்த்து முன்னாடி போனா, பேச்ச பார்த்து ரெண்டு அடி பின்னாடி வரமாரி இருக்கு. எங்கத இதுதான். லெட்டர்ல அப்படி பேசுவாளுக. நேர்ல பாக்கணுமே அப்படி ஒரு பதவிச நீங்க கவர்னர் வீட்டு பொம்பளைங்க கிட்டக்கூட பாக்க முடியாது. கண்டுக்கவே மாட்டாளுக. தெரியாத ஆளு மாதிரி போக்கு காட்டுவாளுக. இதுதான் எரிச்சலாக்கிற மேட்டரு. கைபடாத ரோசா மாதிரி ஒரு மினுக்கு. எனக்கு நெத்தி நரம்பு புடைக்கிறது இதனால்தான். ஐயையோ வேண்டாம், அப்புறம் ஆயா வாங்கி வெச்ச சர்வரோக நிவாரணி ஜண்டு பாமை கடன் கேட்கிற மாரி ஆயிரும். கடிதத்தைப் படிங்க.*

*டைரியிலிருந்து....*

*நீ என்னதான் பேச மாட்டேன்னு சொன்னாலும் என்னோட மனசு கேட்கவே மாட்டேங்குது. அப்புறம்* Mahadevi *கிட்ட* Question Paper *காசு நீ கேட்டே. அது என்கிட்ட கேட்டது. நான் தராமல் இருப்பேனா? சொல்லு. அது திருப்பிக் கொடுத்தது. நான் வாங்கலை. அன்னிக்கு கை நீட்டுன்னு விளையாட்டா மகா சொல்ல நான் வெகுளியாக நீட்டிட்டேன். டக்குன்னு காசை கையில வெச்சிருச்சு. ஏமாந்துட்டேன். நான் யார்கிட்ட கடன் வாங்கினாலும் கொடுக்க மாட்டேன். யாருக்காவது கொடுத்தாலும் திருப்பித்தான்னு கேட்க மாட்டேன். ஏன்னா* Friends *குள்ள* Rs problem *வந்துடும். நான் இதுவரை உன்கிட்டே காசே கேட்டதில்லை. இப்பத்தான் கண்டுபிடிச்சேன்.*
Jolly *யா எதுவும் எழுத முடியலை. ஆடிப் பண்டிகைக்கு ஸ்ரீராம் என் வீட்டுக்கு வரணும்னு சொன்னான்.* So *அன்னிக்கு ஸ்ரீராம் கூடத்தான்* program.

எங்க வீட்டுக்கு எல்லாரையும் கூட்டிப்போறது பள்ளிக்கூட,த்துல இருந்தே தொடங்கியிருச்சு. நான் ரொம்ப பேதம் பார்க்கிறது இல்ல. Monthly Test ல ஒண்ணுமே எழுதலை. செல்வா புக்கைப் பார்த்து எழுதிருவான். அவன் பேப்பரைப் பார்த்து நான் எழுதுவேன். படிக்கவே இல்லை. Maths, A\c எல்லாம் ஜீரோதான். ஒரு எக்சாமுக்கு லீவு வேற. எவ்வளவு Fine கட்டப்போறேனோ தெரியல.

ஞாயிறு 6.30

என்னைப் பத்தி கொஞ்சம் யோசிச்சுப் பார்த்தேன். நான் இருக்கிறதால யாருக்கும் சந்தோஷம் இல்லை. இல்லாம போனாலும் யாரும் கவலைப்பட போறதில்லை.
சிலசமயம் எனக்குன்னு யாரும் இல்லைன்னு தோணுது. இப்படி Think பண்ணியே கவலை அதிகமாயுடுது. இப்போ படிப்பில் 61% இருக்குது. இதே % அப்படியே கடைசிவரை இருந்தாலே போதும். நீ 80% வாங்கணுங்கிறது என் ஆசை. கண்டிப்பாக நீ வாங்குவே.
அம்பிகா பத்தி Latest செய்தி ஒண்ணு பசங்க சொன்னாங்க. அதை அப்படியே சொன்னா சுவாரசியம் போயிரும். நீ தெரிஞ்சுக்க முயற்சி பண்ணு. உனக்கு தெரியும்ணு நினைக்கிறேன்.
அம்பிகாவுக்கு புடிச்சது ஏட்டிக்கு போட்டி — புரிஞ்சுதா 4—1 = 3

*5*
*லவ் இன்ஃபினிட்டி*

***காதலில் மோதல் வந்தது!***

*நமக்கு பிரச்னையே நாமதாங்க. சந்தோஷமாக இருந்தா மறைச்சுக்கணும், துக்கமா இருந்தா சகிச்சுக்கணும்னு எப்பவுமே இருக்கறோம். எதையும் எக்ஸ்பிரஸ் பண்ணா அது தப்பு ன்னு உபதேசம். எதுக்கு இதெல்லாம். சொல்லுங்க... காதலோ.. காமமோ வெளியே போனா நல்லதுதானே! ஒருத்தன் மூஞ்சில வெளிச்சம் தெரிஞ்சா, சிரிப்பைப் பார்த்துட்டா அதை ஒழிச்சுக்கட்ட ஒரு கேங்கே உண்டு எங்க ஊருல. கடைசில பார்த்தா காலேஜிலயும் அதுமாதிரி ஆட்கள் இருக்காங்கன்னு மெல்ல புரிஞ்சிக்கிடேன். அதுக்குள்ள மைதிலி எங்கூட முறைச்சுக்கிட்டா. இந்த சண்டாள முண்டைக்கு என்ன கோபம்னே புரியல. நா அப்படித்தாங்க.. கோபம்னு வந்து மூக்கு புடைச்சா, கண்டபடி பேசிப்புடுவேன்.*

*ஆனாலும் நியாயமா இருக்குங்கிறதுனால பிரெண்ட்ஸ் அனுசரிச்சுப் போவாங்க. வீட்டுல அப்பனும் முனகிகிட்டே போயிருவாரு. பொண்ணுகதான் பூனக்குட்டி மாதிரி ஆச்சே. நாமதான சேவகன் மாதிரி பால் ஊத்தி பாத்துக்கணும். இதை பாலாஜி சொன்னான் பாருங்க. மூட்றா கி.கூன்னு கத்திட்டேன். அவனுக்கும் ஒரு மாதிரி ஆக, சுத்தி நின்னவனுக வேற குபீர்னு சிரிப்பு. கொலைவெறி ஆவுற மாரி காமெடி இப்ப அவசியமா? கேட்கறன். செரி என் வருத்தத்த கடிதமாக எழுதி மைதிலிகிட்ட கொடுத்தேன். அதைப் படிங்க. ஓகே.. கூல் கூல்... வரிகளை மடக்கி எழுதினால் கவிதை என்று உலகம் பார்க்கும் என்பதை புரிந்துகொண்டபோது இப்படி எழுதினேன். எப்படி மாற்றுவேன்?*

*புது வீடு*
*எல்லாமே புதுசாய்*
*என்னால் எடுத்துப்*
*போக முடிந்தது*
*நீயில்லாத வாழ்க்கையையும்*
*நிசப்தமான மனசையும்தான்.*

*புது வீட்டைக் காட்டிலும்*
*பழைய வெளிச்சம் குறைந்த*
*இருளான மழை ஒழுகும்*
*நீ வந்து போன*
*நீ ஒளிந்து ஓடி விளையாடிய*
*நீ தலை இடித்துக்கொண்ட தாழ்வாரம்,*

*நீ நடந்த சுவடுகள் அழியாமல் இருக்கும் என்*
*பழைய வீடு அற்புதமானது.*
*வீடு மாற்றிக்கொள்ளலாம்*
*மனசை எப்படி மாற்ற?????*

*அடுத்தவர்கள் ஆயிரம் சொல்லி கெடுக்க நினைக்கலாம்*
*நீ எப்படி நம்பலாம்?*
*என்மேல் சந்தேகம் எப்படி வரலாம்?*
*உனக்கு அவள் தோழி*
*எனக்கு அவள் யாரோ?*
*நல்லவர்களுக்கு தீமை விளையும்போது*
*தடுக்க நினைப்பதும், தடுப்பதிலும் தவறில்லை*
*பாம்புக்கு பால் வார்த்தால்?*
*அதனால்தான் அனைத்தும் அறிந்தும்*
*அமைதியாக இருக்கிறேன்.*
*நாம் தப்பு செய்தால்தானே பிரச்னை வருகிறது?*
*அவள் உப்பு தின்றாள், தண்ணீர் இப்போதுதான் குடிக்கிறாள்.*
*அவ்வளவுதான்.*

*அதிகமாக ஆட்டம் போட்டால் இப்படித்தான் அவஸ்தைப்படணும் ஓகே. அடுத்தவங்க* Problem *பத்தி பேசினா நமக்குள் ஏன் சண்டை வரணும். யார்* Lr, Board *ல எழுதறது அப்படின்னு எல்லாம் கொஞ்சம் தெரியும். யாரையும் காட்டிக் கொடுப்பதால் என் மனது வேதனைதான் படும். ஒருநாள் வேணா உங்கிட்ட சொல்றேன். மோகனா மாதிரி நல்லவங்க பக்கத்திலே உட்கார்ந்து பழகறே. அப்புறம் ஏன் உன் மைண்ட் இப்படி* Think *பண்ண முடியுது. உன்மேல் கோபம் இருந்தது. இப்படி எடுத்தோம், கவிழ்த்தோம்னு பேசினயில்ல, அதுக்காக. இப்ப அதெல்லாம் மறந்துட்டேன்.*

*எப்பவும் யாராவது உன்னைப் பத்தி தப்பாக சொன்னால் நான் நம்ப மாட்டேன். அப்படி நம்பி சந்தேகப்பட்டதால் விளைந்த விளைவுகளால் அதிகம் காயம்பட்டவன் நான். உனக்கே நல்லா தெரியும். அதுக்கப்புறம் என்னால் சாப்பிடக்கூட முடியலை. ஒழுங்கா தூங்க முடியலை. ரொம்ப ரொம்ப ஒல்லியாகிட்டேன். மனசு பூரா கவலை. இப்போ கொஞ்ச நாளாத்தான் ஏதோ மனம் அமைதியாக இருக்குது. மறுபடியும் என்னை மாற்றிவிடாதே ப்ளீஸ். யார் இப்படி உன் மனசைக் கெடுக்கிறது?*

*நான் அப்படித்தாங்க. நான் ஒருத்தரை புடிச்சவங்கன்னு நெனைச்சிட்டா பாசநேசமாக பழகுவேன். அது பலமா, பலவீனமான்னு தெரில. ஆனா நீங்க என்னை நம்பியே ஆகணும். இல்லீன்னா நான் கொலைவெறி வந்த மாரி*

ஆகிடுவேன். அப்படித்தான். உறவில் நம்பிக்கை காப்பாத்தறது முக்கியம். எல்லாமே பலாபலனை எதிர்பார்த்த உறவும்பாங்க. ரைட். ஆனா அதிலேயும் செய்யற எல்லா விஷயத்தையும் மொய் கணக்கு மாரி சரிக்கு சரியா பாக்க முடியாது பாருங்க.

பொம்பளைகிட்ட ஆண் ஏன் ஈர்க்கப்படுறான். செக்ஸ்தான் முதல்ல. அப்புறம்தான் மத்த சமாச்சாரமெல்லாம். அறிவு சார்ந்த உறவும் இருக்கு. பெண் அப்படிங்கிறதால ஆண் ஈர்க்கப்படறத இங்க சரியானதாக பார்க்கிறதில்லை. என்ன செய்யறது? எங்க காலேஜ்ல பொண்ணுக கூட பேசினா ஃபைனாமா? கிளாசுக்கு நடுவுல சுவரு கட்டிட்டா முடிஞ்சுது. கிறுக்குப் பயலுகங்கிறது சரியாத்தான் இருக்கு, வீட்டுக்கு பக்கம்னு இங்க வந்ததுக்கு மைதிலி மட்டும்தான் லாபம். படிப்புன்னு சொல்லலாம்னு என் மனசுக்கு கூட தோணலை. அதுதான் படிப்போட சக்தி.

**போடி நீ போ!**

மனசுல பெரிய காயத்தை பண்றது பெண்களோட வேலைதான். எப்படின்னா, நாம உசுரைக் கொடுத்து ஒண்ண பண்ணுவோம். இவ்வளவுதானான்னு டீல் பண்ணுவாங்க. ஓங்கி கடவாயிலேயே குத்தி உடைச்சுப்புடலாங்கற மாதிரி கோபம் வரும். நான் இப்ப அவுட் ஆஃப் பார்ம்ல இருக்கேன்.

முதல்ல நான் இப்படி கிடையாது. சோத்துல முடிய பாத்தாலே சாப்பிட்டுக் கிட்டு இருக்கிற தட்டையே வீசி எறிஞ்சிருவேன். அம்மா, அழுவா. சாப்பாட்டுல தப்பை எப்பவுமே மன்னிக்க மாட்டேன். இந்த பெண்கள், தனக்கு அடிமை ஒருத்தன் கிடைச்சுட்டான அவனை வதைக்கிற கொடுமை இருக்கே. தாங்க முடியாது. இவளுக சேலைய தரையில வுடாம தூக்கிட்டு நாம பின்னாடியே வரணும்பாளுங்க. அதேசமயம் ஏன் பின்னாடியே வர்ற? வேற வேலையில்லையா ன்னும் அதே வாயாலதான் சொல்லுவாளுங்க.

என்ன பண்றது? ஆண்டவனோட டிசைன் அப்படி. ஏத்துக்கிட்டே ஆகணும். செரி... லெட்டர் எழுதறது மட்டும்தான் காலேஜ் அரசியலில் வருகிற மனச்சோர்வை நீக்குது.

நீ என்னை சந்தேகப்பட்டாலும் நான் விரும்புகிற ஒரே பெண் நீதான். என் அம்மாவை அடுத்துத்தான். சந்தேகமில்லை. நான் யுவராஜ் மாதிரி ஆளுகளோடு பழகினாலும் அவனோட Personal நானும், என்னோடதில் அவனும் தலையிட மாட்டோம். அந்த Friendship சும்மா Just like that. ஆனால் செல்வா மாதிரி Friend எனக்கு இருக்கிறான்னு சொல்லிக்கிறதுல எனக்குத்தான் பெருமை.
நீ அர்ச்சனாவிடம் பழகு. எனக்கு பிடிக்கலை. நான் ஒதுங்கிவிட்டேன்.

அம்பிகா உன்னிடம் எத்தனை மேட்டர் என்னைப் பற்றி சொல்லியிருப்பாள்? அவ உங்கிட்ட சொல்லாம விட்ட நிறைய மேட்டர் பசங்களுக்குத் தெரியும். இப்படி நடக்கும்னு எனக்கு முன்னமே தெரியும். அதனால்தான் அவகிட்ட போன வருஷத்திலிருந்தே நாங்க பேசறதில்லை. நான் செல்வா, ஸ்ரீராம் எல்லாம்.

இப்ப நான் மகாதேவிகிட்ட கூட பேசறதில்லை. மோகனாகிட்டேயும்தான். நீயே பேச மாட்டேங்கிற. நீ ஏன் உன்னைக் கஷ்டப்படுத்திக்கிட்டு என்கூட பேசற. இந்த Lr

எழுதியிருக்க மாட்டேன். ஆனால கிளாஸில் உன்கூட சண்டை போட முடியலை. அதான். அதனால் இப்போ திட்டி விடுகிறேன்.
போடி!

*7*
*லவ் இன்ஃபினிட்டி*

## லவ் இல்லன்னா நட்பு ஓகேவா?

*டைரியிலிருந்து...*

*பாருங்க. காதலோ, நட்போ நம்மோடு லைஃபிலிருந்து ஒரு விஷயம் சொல்லிப்பாருங்க. என்னோட பிரெண்டு செல்வாவே நம்பமாட்டான். அவனுக்கும் பயம், நம்ம பிரெண்டு எப்படி இப்படி யோசிக்கிறான்ட்டு. ஆனா ஒரு படத்தை சொல்லி உதாரணம் காட்டுங்க. காலிப்பயலுக அப்படியே நம்பி உம் கொட்டுவானுக. எப்படி படத்தோட டைரக்டரு புத்திசாலின்னு நம்பறாங்கன்னு எனக்குப் புரியல. ஆனா தன் பக்கத்துல இருக்கிற பிரெண்டு முட்டாள்கிறதுல மாற்றுக்கருத்தே கிடையாது.*

*இதுல இருந்து ஒரு விஷயம் தெளிவாச்சு. யாருக்கும் எதையும் நான் நிரூபிச்சுக் காட்டப்போறதில்லை. என்னால சாக்ரடீஸ் மாதிரி விஷம் கொடுத்து சாக முடியாது. கலீலியோ மாதிரி ஜெயில்ல உட்காரவும் முடியாது. நான் யோசிக்கிறத எழுதி வெப்பேன். யாராவது படிச்சா அது அவுங்களுக்கும், சமூகத்திற்கும் லாபம். இல்லன்னா, கிடக்குது கழுதை. மண்டைக்காரன்களுக்கு எப்பவுமே ஈகோ இருக்கும். அவங்களால ரேஷன்கடைகளுக்கு புழுத்த அரிசியை வாங்க முடியாது. ஏன்னா, அந்த அமைப்போட உளுத்துப்போன டிசைனை மாத்த டிரை பண்ணிக்கிட்டிருக்கிறவங்க அவங்க. சுருக்கமா, தலைவன் வேலை, வேலை சொல்றதுதான். செய்யறது கிடையாது. வேலைக்காரங்க அதை ஃபாலோ பண்ணனும். இங்க எல்லாமே தலைகீழா இருக்கு. எரிச்சல்.*

*கடிதத்திலிருந்து....*

*திங்கட்கிழமை காலேஜ் முடிஞ்சு நானும் முகமதுவும் நேராக பஸ்ஸைப் பிடித்தோம். எந்த இலக்கும் கிடையாது. ஈரோடு போய் நேராக படத்துக்குப் போய்விட்டோம்.*

*படத்தோட பேரு சொன்னா உனக்கே பிடிக்கும்.*

*ஏய்! நீ ரொம்ப அழகா இருக்கே!*

*படம் Super.*

கதை இதுதான். இப்போ நான் உன்னை Love பண்ணினேன். நீ பண்ணலை. அப்பவும் நான் உன்கூட பேசினேன்(ஓகே, கொஞ்ச நாள் கழித்துத்தான்) பழகினேன். முன்பு எவ்வளவு அன்பு உன்மேல் வைத்திருந்தேனோ அதைவிட அதிகமாத்தான் இப்போ இருக்கிறேன். இனிமேலும் அப்படித்தான். இதுதான் உண்மையான அன்பு. நான் உன்கிட்ட பேசாம பழகாம இருந்தேன் என்றால் இத்தனை நாள் உன்னை Love பண்ணியதே சும்மா என்றாகிவிடும்.

எதையும் எதிர்பார்க்காம நீ விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் உன்னை நேசித்து கொண்டிருக்கிறேன் நான். இனி படத்தோட Story க்கு வருவோம். மேலே சொன்னது எக்சாம்பிள்.

ஷாம், ஸ்னேகாவை Love பண்ணுவான். ஷாமின் அத்தைப் பொண்ணு ஸ்னேகா. ஷாமோட பர்த்டேவுக்கு ஸ்னேகாகிட்ட நான் உன்னை Love பண்றேன்னு சொல்றாரு. ஆனா அவ Affection வேற Love Feeling இல்லை என்று விடுவாள். ஷாமோட friend அவதான் உன்னை love பண்ணலை. நீ ஏன் அவகூட பேசுகிறாய். பழகுகிறாய் என்பார்கள்.

நீ ஒண்ண கொடுத்தா நான் ஒன்ன கொடுக்கிறதுன்னு சொல்ற வியாபாரம் இல்ல.

Love பண்ணலைன்னா என்ன? இதுக்கு முன்னாடி நாங்க எப்படி இருந்தோமோ அப்படித்தான் இனி மேலும் இருப்போம். அப்படின்னுவான். அப்புறம் ஷாம் — ஸ்னேகா Marriage பண்ணிக்குவாங்க. காதல்ல தோத்துட்டா தம், தண்ணி தற்கொலை அதுக்கு தீர்வல்ல. கடைசிவரை காதலோட இருக்கிறதுதான்.

நல்லா இருக்கா? Theme எனக்கு. பிடிச்சிருக்கு. ஏன்னா நான் அப்படியேதான். பழைய மோகனாக இருக்கிறேன்.

புதன் கவி பர்த்டே (17.6.2002). நான் க்ரீட்டிங் அனுப்பிப்பிட்டேன். உன் பேரையும் போட்டுத்தான். இப்படி மோகன் — மைதிலி எழுதினா ஓக்கேவா?

இனிமேல் நீ Lr கொடுக்காத. நேர்ல பேசலாம்னு சொல்லியே ஒரு வருஷம் போயிருச்சு. இந்த வருஷமும் அப்படியே போயிருமோ? மீரா கவிதை புக் படி. இன்னிக்குத் தந்த புக், கவிதை எல்லாத்தையும் நான் சொல்றப்போ ஒரு கவர்ல போட்டுத் தா. ஓகே. நல்லாப் படி. நல்லா சாப்பிடு. முடிஞ்சவரைக்கும் மனசை சந்தோஷமாக வெச்சுக்கோ.

டைரியில்...

உண்மையான அன்புக்கு கண்ணீர்த்துளிதான் பரிசா? இல்லை தகுதியான ஆளைத் தேர்ந்தெடுக்கலியான்னு எனக்குப் புரியல. எவ்வளவு பிரியமா மைதிலிகிட்ட பேசுனாலும் மூத்திரச்சுந்துல வெச்சு ரேப் பண்ணீருவான்னு நெனைக்கிற மாதிரி அப்படி ஒரு பயம் அந்த கண்ணுல. முன்னாடி அனுபவம் அப்படி இருக்கலாம். கவுண்டனுக திரியற ஏரியா. பழுக்காத பழுத்தையும் நசுக்கிப் பார்த்து பழுக்க வெப்பானுங்க. நான் பார்த்து பழகின பெண்களில் இப்படி ஒரு பயத்தை கண்ணுல காட்டி என்னை மிரட்டுனது இவதான். அதுகூட ஒரு அழகுதான். என் கிறுக்குப்புத்தி இப்படித்தான் புரிஞ்சுக்கிதான்னு தெரியல.

*8*

*லவ் இன்ஃபினிட்டி*

***புலம்பல் இலக்கியம் பழகினேன்***

*சுய புலம்பல்கள் போதும். நான் எழுதாவிட்டால் தமிழ் இலக்கியம் என்னாகும்? சொல்லுங்கள். இதோ என் படைப்பு*

*இந்த 17 வயதுகளில் பாதியை*
*சோகங்களே சுவைத்துவிட்டன*
*சின்னஞ்சிறு வயதில்*
*பொம்மைகளோடு நான் அதிகம்*
*பேசியதில்லை.*
*வெறும் தனிமையின் சுவடுகளோடுதான்*
*என் சுவாசமெல்லாம்.*

*எந்தையும் தாயும் எனக்கு எல்லாமே கொடுத்தார்கள்*
*ஆனால் கொடுக்க மறந்தது அன்புதான்.*
*நான் வாங்க மறந்தேன்*
*அவர்கள் கொடுமைக்காரர்கள் அல்லர்.*

*எனினும் அன்பால் என்னை*
*கொடுமைப்படுத்தவேண்டும் என்று*
*நான் நினைத்தேன்.*

*திட்டுகள் வாங்கி வாங்கி*
*பழக்கமான என் காதுகள்!*
*மரத்துப்போன என் மனசு!*
*இறுகிப்போன முகம்*
*எதையோ இடையறாது தேடும் கண்கள்*

*இவ்வாறுதான் இருந்தேன் அகவை பத்து வரை.*

*பின்னர் புத்தகங்கள் என் புலன்களைத் திறக்கும்*
*சாவியானது.*

*படிக்கும்போது கவலைகள்*
*எல்லாம் பஞ்சுபோல சுகமாய் தோன்றியது.*
*நண்பர்களின் சூழலில் நான் மட்டும் தனியாய்!*
*அப்போதே எல்லாம் எனக்குத் தெரியும் என்ற*
*கர்வமெனக்கு முள்முனையளவு துளிர்த்துவிட்டது.*

குறும்புத்தனங்களுக்கு குறைவில்லை என்னிடம்
உடம்பில் காயங்கள் ஏற்படுத்திக்கொள்வேன்.
மற்றவர்களைப் போல நான் இல்லையே!
என்ற தாழ்வு மனப்பான்மை எனக்கு உண்டு.

கறுப்பு நிறமான எனக்குள் நெருப்பு ஆறு
உள்ளே ஓடுவது யார்க்கும் தெரியாது.
அவமானங்களால் கூனிக்குறுகிப் போவேன்.
எனக்குள் நான் அரசன் என்பது யாரும் அறியாதது.

எட்டு தாண்டி பதினான்கில் கால் பதித்தேன்.
எனது ஊர்ப்பள்ளி படிப்பு முடிந்து காவிரிக்கரையில்
கால்பதித்தேன்.
ஆம். என் மேல்நிலைக்கல்வி அங்குதான் மரநிழலில்
தொடங்கியது.

முரட்டு முற்களால் குத்தப்பட்ட நான் என் இதயத்திலிருந்து
வழியும் குருதியைத் துடைத்துக் கொள்வேன்.
இதயத்தை இதமாக்கிக் கொண்டேன்.
ஆவேசமான வார்த்தைகளைக் கேட்டு பழகியதால்
அன்பான வார்த்தைகளைப் பேச பழக முயற்சித்து வந்தேன்.
ஊசி குத்தினால் பூவிற்கு வலிக்கும்.
பூவாக நான் இருந்தபோது வலித்தது.

என் இருளடைந்த மனதிற்குள் இருந்த கவிஞனை
வெளிச்சத்திற்கு இழுத்து வந்தது நண்பர்கள்தான்.

ஒரு நாள் நண்பன் எழுதிய காமெடி கவிதையை விமர்சிக்க
வாக்குவாதம் வளர கவிதைப் பந்தயம் உருவானது. முடிவு
பண்ணிவிட்டேன். ஆனால் எப்படித் தொடங்குவது?
பத்திரிகையில் வந்த கவிதையை என் கவிதை என்று சொல்லிக்
நண்பர்களை ஏமாற்றினேன்.
ஆனால் என் மனசாட்சி உறுத்தியது.
ஏன் நம்மால் கவிதை எழுத முடியாதா?
என்னுள் அதுவரை அலைகழித்த உணர்ச்சிகளை எல்லாம்
கருவாக்கி காகிதங்களில் ஏற்றி கவிதை என பெயரிட்டேன்.
பின்தான் தெரிந்துகொண்டேன். அதுதான் கவிதை என!
ஆச்சரியமாக இருந்தது, கூடவே ஆனந்தமாகவும்தான்.

9

லவ் இன்ஃபினிட்டி

**எனக்கென்று ஒரு தோழி!**

கவி பத்தி நிறைய பேசலாம். இன்னைக்கும் கூட அவகிட்ட போனா விட்ட இடத்திலேர்ந்து பேசுவா. எதையும் பேசலாங்கிறதுல எல்லாமே உண்டு. நெருங்கின பிரெண்டுனா நக்கல் ஜாஸ்தியா இருக்கும். பொறுத்துக்கலாம். தப்பில்லை. நம்மோட டேஸ்டுக்கு ஏத்த மாரி விஷயங்களை அவளே வாங்கிக் கொடுப்பா. பிரியமானவ. சொந்தத்துல இந்தளவு புத்தியோட ஒருத்தி இருப்பாளா, அப்படி இருந்தாலும் பிகு பண்ணாம எங்கிட்ட பேசுவாளான்னு ஏக்கம் இருந்தது. கவி அதை உடைச்சிட்டா.
அவளோட லெட்டர்ல எவ்வளவு பிரியம் கொட்டிக்கிடக்குது.

உன்னுடைய Book போடணும்கிற ஆசை நிறைவேறியதில் எனக்கு ரொம்ப சந்தோஷம். ஆனா பெரிய வருத்தம் என் பேர்ல வந்த கவிதை. கடவுளே! அந்த கவிதை நான் எழுதல. படிச்சதை புக்கில் Note பண்ணி வெச்சிருந்தேன். Atleast நீ என்கிட்ட ஒருமுறை கேட்டிருக்கலாம். இன்னும் மனசுக்குள் அது பெரிய உறுத்தலா இருக்கு. உமா அண்ணிக்கிட்ட கேட்டேன், Book பத்தி. ரொம்ப நல்லாருக்குன்னு சொன்னாங்க. அதிலிருந்த mistakes பத்தி சொல்றதா சொன்னாங்க. நான் கேட்டுச் சொல்றேன்.

உன்னுடைய Diary யை கொடுத்து விடட்டுமா? உன்னை நேர்ல பார்த்து கொடுக்கணும்னு நினைச்சேன். நான் என்னுடைய டைரியில் எழுதறமாதிரியே உன்னுடைய டைரியில் எழுதிட்டேன். அப்புறம்தான் இதை Loosu தனமா எழுதறேன்னு நினைச்சேன். படித்த கவிதைகள், Wordings சில எழுதியிருக்கேன். அப்பப்ப என்னென்ன தோணுதோ அதையெல்லாம் எழுதினேன்.

என்னைப் பத்தி ஏதாவது வருத்தம் உள்ளதா? அப்படின்னு எழுதியிருந்தாய். அப்படி எதுவும் கிடையாது. சில கேள்விகள் உன்னிடம் எனக்கு புரியவில்லை. நீ Diary இல் எழுதிக்கொடுத்த கவிதையை Friends படிச்சாங்க. நிறைய கேள்விகளை என்னிடம் அடுக்கினாங்க. எல்லோருடைய கண்ணோட்டமும் ஒரே மாதிரி இருக்காது. So Dont Consider it. உன்னைப் பார்த்து நிறைய பேசணும், கேள்விகள் கேட்கணும்.

நான் எழுதினதுக்கான உன்னோட பதில் கடிதம் படிச்சதும் எனக்கு மனசு கஷ்டமாயிருச்சுடா. ரொம்பவே ஃபீலிங்கா இருந்துச்சு தெரியுமா? இன்னும் ஒரு வருஷம் கழிச்சு எனக்கு Marriage செஞ்சிடுவாங்க. நாள் சீக்கிரம் போய்க்கிட்டே இருக்கு. நான் M.sc பண்ணுவேன் அப்படிங்கறது 98% சாத்தியமில்லை. அப்பா ரொம்பவே கஷ்டப்படறார். இன்னும் அவங்கள கஷ்டப்படுத்த விருப்பமில்லை. முடிஞ்சவரைக்கும் பார்க்கலாம். எல்லாம் நன்மைக்கே.

Very Well. அப்புறம் அம்மா எப்படி இருக்காங்க? நான் ரொம்ப கேட்டதாகச் சொல்லு. ஆத்தா வீட்டிற்கு வந்துட்டுப் போனதா அம்மா சொன்னாங்க. தம்பி எப்படி இருக்கான்? நல்லா படிக்கிறானா? அவனுக்கும் Lr எழுதணும்ணு நினைக்கிறேன். அடுத்த தடவை எழுதிக் கொடுக்கறேன். அவனுக்கு வாங்கின Gift இருக்கு. எடுத்துட்டு வரலை. உனக்கு ஏதாவது Books வாங்கணுமா? Own Book(Kavithai or Novel(bala)) ஏதாவது வேணும்னா Book names எழுதிக்கொடு. என்னால் முடியும்போது வாங்கிக் கொடுக்கிறேன்.

அன்புடன்
உன்
Kavi

கவி எப்பவுமே கனிவோட உரிமையோட பேசுவா. செக்ஸ் உட்பட அவகிட்ட நான் ஃப்ரீயா பேசுவேன். இல்லைனா 'M' கிட்ட காதல் தூது சொல்ல அனுப்புவேனா?

தான் நெனைச்சத சாதிக்கிற மூர்க்கமான துடிப்பு அவகிட்ட உண்டு. ஆனா கவனமா பேசணும். ஒரு வார்த்தை விட்டதுக்கு போடா அப்படின்னு ஒரு வாரம் பேசாம இருந்திருக்கா. கோபம் இருக்கிற இடத்துலதான் கொண்டாட்டமும் இருக்கும். புத்தகம், சாக்லெட்டுன்னு பிரியமானவ. திடீர்னு பேசலீன்னா எப்படியிருக்கும்? அதை என்னால் தாங்கிக்க முடியாது. என்னமோ என்னைச் சுத்தி இருக்கிற பெண்கள் ஏதோ ஒரு விதத்தில் என்னை செதுக்கிட்டே இருக்காங்க.

காதல், நட்பு லேபிள்களை விட்டுடுங்க. மார்க்கு வாங்காததுக்கு மானங்கெட அப்பன் என்னைத் திட்டுனாலும் அவரோட ஆண்மையை உலகத்துக்கு சொன்னது என்னோட குரல்தான். அதனால, கேட்ட காசு, அர்ச்சனைக்குப் பிறகு பிலிப்ஸ் டிவி மேல எப்பவுமே இருக்கும். அம்மாவுக்கு, நான் மாநிறமா பொறந்ததுல அப்படியொரு சந்தோஷம். எங்க வீட்டுல ஆத்தாவையும் என்னையும் தவிர்த்து மத்தவங்க எல்லாருமே கருப்பு. பெருமையான பாமர குடும்பத்தின் முதல்

அக்கவுண்ட்ஸ் பட்டதாரி. இதெல்லாம் உண்மையில் எனக்கு பெருமையான்னு எனக்கு தெரியல.

*10*
*லவ் இன்ஃபினிட்டி*

**மௌனமொழி நீ பேசு!**

*ஆண்கள் ஒருத்தருக்கொருத்தவர் சண்டைன்னா கூட பேசாம இருக்கிறது வேறமாதிரி. ஆனா பெண்களோடு புறக்கணிப்புங்கிறது ஆழமா எலந்தை முள்ளை தரையில கீறுனமாதிரி மறக்கவே முடியாத வலியா மாறுது. என்னமோ. லெட்டர்ல பிரியமா பேசுனா. திடீர்னு கிளாஸ்ல பேசவே மாட்டேங்கிறா. கூட இருக்கிறவளுங்க ஒருத்தியும் நம்பிக்கை தர்ற ஆளுக கிடையாது. மனசை ஆத்மாவின் ஜன்னல்னு சொல்லுவாங்க. இங்க எல்லாமே காலி கிரவுண்டால்ல கிடக்கு.*

*மைதிலியைச் சுத்தி வர்றேன்னா, என்னமோ பிடிச்சிருந்துது அவ்வளவுதான். அதுக்கு மேல அதை என்னால விளக்க முடியல.*
*நான் ஏன் உன்னை இப்படி சுத்திவர்றேன்னு சத்தியமாக எனக்குத் தெரியல. டெஸ்டோஸ்ட்ரோன் வேகமா, ஜாதக கட்டத்துல ஏதாவது சிக்கலா எதுவேண்ணா இருந்துட்டு போகட்டும். இப்போதைக்கு நீதான் எனக்கு முக்கியம். இவன் ஏன் என்னை இப்படி தொந்தரவு பண்றான்னு நீ நினைக்கலாம். இதுநாள் வரைக்கும் இதைச் சொல்லாம இருந்ததுதான்* Problem *பெரிசாக காரணம்.*

*கொஞ்சநாள் பிரிவிலாவது என்னைப் பற்றி நீ தெரிந்துகொள். தினம் தினம் உன்னுடன் பேசினால் உன் மனதின் வலி மேலும் மேலும் அதிகரிக்கும். அதனால் இனிமேல் சிலகாலம் நமக்குள் தொடர்பே வேண்டாம். பேசவே வேண்டாம் என்பதைத்தான் சொல்கிறேன்.*

*இது நிரந்தரம் அல்ல தற்காலிகம்தான். புத்தி கெட்ட தேசம் பொடிவெச்சுப் பேசும் எதைப் பற்றியும் நீ கவலைப்படாதே. அன்பு கட்டாயப்படுத்தி வருவதல்ல. அப்புறம் தினமும் நான் உனக்காக கடவுள்கிட்ட வேண்டிக்கிறேன்.*

*மலரே இனி கொஞ்ச நாட்கள்*
*நீ பேசு. மௌனமொழி. கவலைகள் வேண்டாம்.*
*உனக்குத்தான் நான் இருக்கிறேனே!*
*எழுத வேண்டாம்னு நெனச்சாலும் உன் முகம் மனசுக்குள்ள தாமரையா பூத்தாவே பேனாவைத் தேட கை வேகமாக ஓடுது. அது என்னவோ போ.. இதுக்கு எந்தப் பேர வேண்ணாலும் உலகம் வெச்சிக்கட்டும். எனக்கு அது முக்கியமில்ல. இப்போது இந்த மனசுல உன்னை நெனைச்சிக்கிட்டு இருக்கும்போது*

உடம்பு முழுக்க கரண் பாயுற பரவசம் எனக்கு போதும். என்னோடு ஆயுசுக்கும். எழுதிட்டு டைரியை மூடினேன். இன்னைக்கு இதுபோதும். தலைவலித்தது. நான் எழுந்ததை உணர்ந்ததும் ஜீன் வாலாட்டியபடி உள்ளிருந்து எழுந்து வந்தது. அதன் தலையை நீவியபடி இருளில் பார்த்தேன். பார்வை ஊடுருவமுடியாத இருட்டு பயத்தை தந்தது. அப்படியே கற்றாலைக் கயிற்று கட்டிலில் சாய்ந்தேன்.

*11*

*லவ் இன்ஃபினிட்டி*

***நாங்க காசனோவா கேங்!***

*என்னடா இது நேரடியாக காலேஜ் லவ், துயரம்னு போயிட்டேன்னு நினைக்கறீங்களா? நான் ஆல்வேஸ் காதல், பிரியத்திற்காக ஏங்கிக் கிடந்தவன்தான். பொண்ணுங்க மேல ஆண் இன்ட்ரெஸ்ட் காட்டுறது இயல்பானதுதானே ப்ரோ!*

*ஆனா கிராமத்துல அது பெரிய பிரச்னையாயிரும். ஒண்ணு மண்ணா திரியறதுனால என்ன பண்றீங்க அப்படீங்கிறதுன்னு ஒடனே வீட்டுக்கு வாட்ஸ்அப் வேகத்துல போயிரும். சம்பே பையன்தானுங்க இப்படி பண்ணிப்போட்டானுங்க ன்னு ஒரு நியூஸ் பரவுச்சுன்னு வைங்க. ஆல்ட் நியூஸ் செக்பண்ணிட்டு எங்கப்பா இருக்கமாட்டாரு. பராத்து கையி. ஒரே அப்பு. ரைட் செவுளு லெஃப்ட்ல ஒதுங்கிரும்.*

*எங்க ஸ்கூல்ல நாங்க படிக்கும்போதே செம டீம். அதாவது ஒரு கெத்தா சுத்துற கேங்குன்னு வெச்சுக்கோங்களேன். எங்களுக்கு அப்புறம் வந்த செட்டு பசங்க எல்லாம் தம்மாத்துண்டா இருந்தாங்க சைசுல மட்டும் இல்ல. தில்லா சைட் அடிக்கிறது, ஸ்கூல கட் அடிக்கிறதுன்னு எல்லாத்திலயும்தான்.*

*நான், பாலா, வித்யா, ரங்கன், குமரேசன், ராஜூ, ராம மூர்த்தி, பாலாஜின்னு செம செட். ஜில்லெட் ஷேவிங் செட்டு மாதிரி அவ்வளவு பொருத்தமாக ரகளை பண்ணுவோம். வடிவேல், தனலட்சுமி, ரங்கசாமின்னு மிலிட்டரிக்கு போகவேண்டிய ஆட்களெல்லாம் எங்கள் ஸ்கூல்ல டீச்சராக இருந்தாங்க. பிளம்பர் குழாய்ல அடிவாங்கினாலும் யாரையும் ஒருத்தருக்கொருத்தர் காட்டித்தர துரோகம் கிடையாது.*

*ஆனா இதையெல்லாம் விஜய்சாகர்னு ஒருத்தன் உடைச்சான். வட்டிக்கு கடன் கொடுக்குற கவுண்டன். திமிருக்கு கேட்கவா வேணும். அவங்க வீட்டு வேலைகளை கீழ்சாதி வீட்டு ஆளுகதான் செஞ்சிட்டிருந்தாங்க. அந்த வீட்டு பொண்ணுகள எப்படி மேட்டர் முடிச்சான், எங்க தொட்டான், அந்தப்பொண்ணு எங்க கிறங்குச்சுன்னு பேசப்பேச எனக்கு நெற்றி நரம்பு புடைச்சிட்டு இருக்கும். எங்க டீம்ல எல்லா சாதிகளைச் சேர்ந்தவர்களும் உண்டு. கவுண்டர்களைத் தவிர. ஏன்னா மத்தவங்க வீட்டுக்கு கூப்பிட்டா அவங்க வர்றதுக்கு வீட்டுல பர்மிஷன் கிடைக்காது. நாம போனா வீட்டுக்கு*

பின்னாடி நின்று சோறு திங்கணும். சொல்லுங்க இதெல்லாம் தேவையா?

கவுண்டர் வீட்டு பசங்கள நீங்க எங்கையுமே டேய்னோ, பேரு சொல்லிக் கூப்பிட்டாவோ அவ்வளவுதான். உடனே சாவடில சீர்திருத்தக்குழு கூடி ஊரில் நாம எப்படி நடந்துக்கணும்னு ஒழுக்கவிதிகளை சொல்ல ஆரம்பிச்சுருங்க சாதி பெருசுங்க. சாதிகளை விடுங்க. கிராமம் இல்லையா, நீங்க அங்க வந்தாவே தெரிஞ்சுரும். நம்ம லிமிட் எதுவரை, மேல்சாதிக்காரங்க லிமிட் எதுவரைன்னு.

அப்போ எனக்கு கிளாஸ்ல சில காதலிகள், பல தங்கச்சிகள், மிகச்சில தோழிகள் கிடைச்சாங்க. அதில் முக்கியமானவள் பிருந்தா. சொந்தக்காரிதான். வீட்டு விசேஷங்களில ரெண்டு மூணு முறை பார்த்தேன். அடுத்து சில மாதங்களிலேயே எங்க கிளாசுல வந்து சேர்ந்தா. சூரமக்குப்புள்ள. டவுட்டே வேண்டாம். ஆனா பிரியம் இருக்கே, அது வீட்டுக்கு பின்னாடி இருக்கிற கிணறு அளவு ரொம்பும்.

என்னோடு மாநிறப் பெருமையை முன்னாடி சொன்னேன் இல்லையா? பிருந்தா, கருப்புதான். ஆனா லட்சணமானவ. நான் அவளை மிமிக் பண்ணி நடிச்சிக்கிட்டு இருந்தாலும் அவங்க அம்மாயி வீட்டுல எதைப் பண்ணினாலும் எனக்கு கொண்டு வந்து குடுப்பா. என்னைச் சுத்தி பிரெண்ட்ஸ் எப்படி சேர்ந்தாங்கன்னு இப்ப புரிஞ்சிருக்கிருக்குமே. இதுல பாலாஜி, அவளை எங்க பார்த்தாலும் அப்படி வெட்கப்படுவான். பிருந்தா, படிப்புலதான் மக்கு. மத்த வெவகாரத்திலயெல்லாம் சூரப்புலி.

ஏன்னா கவுண்டர்கள் குடும்பம் மாதிரி பெண்கள் குத்துவிளக்காக வீட்டுல உட்கார்த்தி வைக்கிற வேலை எங்க சாதில கிடையாது. உட்கார்த்தி வைக்க ஆசைதான். ஆனா சோறு கிடைக்காதே. நாள்பூரா வேல செஞ்சாவே கவுண்டனுவ கூலிக்காச ஒழுங்கா தரமாட்டானுக.
தினசரி வெயில்ல காஞ்சா மூஞ்சி, அம்மா மெஸ் சப்பாத்தி மாதிரி ஆகாதா? எங்க குலமே பனங்காட்டு கருப்பணசாமி மாதிரிதான் இருக்கும். இதுல ஆண் என்ன? பொண்ணு என்ன? எனக்கு பிருந்தான்னு கிடையாது. சரண்யா, சித்ரா, கௌதமி, பேனுத்தல சத்தியப்பிரியான்னு எல்லாருமே ஃபிரெண்ட்ஸ்தான். ஆனா அங்கயும் பாஜக செகரட்டரியாக, மோகனசத்யா ன்னு ஒரு பொண்ணு இருந்தா.

பொண்ணுகளோடு பேசிக்கிட்டிருந்தா அங்க வந்து ஏ.. ஏய் அங்க என்ன அவனோட பேசிக்கிட்டிருக்க, நாம பொண்ணுங்க இப்படியெல்லாம் பேசலாமா ன்னு ஆரிய கால கற்பு , புனிதம்,

*சமூகம்னு பேசுவா. ஸ்கிரிப்ட்ல இல்லாத கேரக்டர்கள் உள்ளே வந்து டயலாக் பேசறதுதான் வாழ்க்கை இல்லியா?*

*12*

*லவ் இன்ஃபினிட்டி*

**கொடிப்பூவாய் பூத்தாள் தோழி!**

*ஸ்கூல் லவ் எல்லாம் பார்த்தோம். அதை பின்னாடி நான் எழுதுவேன். முதலில் என் தோழி கவியைப் பற்றி சொல்லிவிடுகிறேன். கவி சொந்தக்காரின்னாலும் டவுனில் வளர்ந்தவள். காசு வித்தியாசம் எப்பவும் சொந்தங்களுக்கிடேயே கத்தி மாதிரி இருக்கும.*

*சாதின்னாலும் கல்யாணம்னு வரும்போது அந்தஸ்து பார்த்து தூரத்து சொந்தங்களுக்கு பொண்ண குடுக்கிறாங்களே அது எதுக்கு? சொந்தம்கிறதை விட காசுங்கிறது எப்பவும் அல்டிமேட். கவியோட வசதியும் அப்படித்தான். காசு வெச்சிருக்கிறவங்க கொஞ்சம் அதுக்கேத்தா மாதிரி அலட்டலா இருப்பாங்க. ஆனா கவிகிட்ட அதுமாதிரி பந்தா ஏதும் கிடையாது.*

*பிரியமா எல்லார்த்துக்கிட்டேயும் பேசுவா. எப்பவும் உற்சாகமா இருக்கிற அவளோ முகத்தை நான் போன் வாங்குனா ஸ்கீரின் சேவரா வால்பேப்பராக வைக்கணும்கூட நினைச்சிருந்தேன். எனக்கு கிடைச்ச 1100 வில, வால்பேப்பர் செட்டிங்கே கிடையாது என்ன செய்வேன்?*

*பள்ளிக்கூட பாடங்களைப் பொறுத்தவரை கவி சுமார்தான். ஆனா மத்த விஷயங்களில் செம கெட்டி. அதுவும் ஃஅவளோடு ஃபிரெண்ட்ஸா உயிரையே விடுவா. பணக்காரங்ககிட்ட எரிச்சலாகிற குணம், யாரையும் மதிக்காம நடந்துக்கிறது. ஆனால யாரையும் உட்காரச்சொல்லி பேசுற குணம், சாதாரணவங்ககிட்டேயும் பாகுபாடு காட்டாம பிரியம் காட்டுறதுன்னு கவி எப்பவும் எல்லார் மனசுலயும் டாப்தான்.*

*சரி இப்போ, அவ எழுதி வெச்ச பாரதியார் கவிதையைப் பார்த்திடுவோம்.*

*இந்திக்கு தமிழ்நாட்டில் ஆதிக்கமாம் — நீங்கள் எல்லோரும்*
*வாருங்கள் நாட்டினரே*
*செந்தமிழுக்குத் தீமை வந்த பின்னும்*
*தேகமிருந்தொரு லாப முண்டோ!*

*விந்தை தமிழ்மொழி எங்கள் மொழி — அது*
*வீரத் தமிழ்மக்கள் ஆவி என்போம்*

*இந்திக்குச் சலுகை தந்திடுவோர் — அந்த*
*ஈனரைக் காறி யுமிழ்ந்திடுவோம்*
*இப்புவி தோன்றிய நாள் முதலாய் — எங்கள்*
*இன்பத் தமிழ்மொழி உண்டு கண்டீர்.*
*தப்பிழைத் தாரிங்கு வாழ்ந்த தில்லை — இந்த*
*தான்தோன்றி கட்கென்ன ஆணவமோ*

*எப்பக்கம் வந்த புகுந்துவிடும் — இந்தி*
*எத்தனை பட்டாளம் கூட்டிவரும்*
*அற்பமென்போம் அந்த இந்திதனை — அதன்*
*ஆதிக்கந் தன்னை புதைத்திடுவோம்*

*எங்கள் உடல்பொருள் ஆவியெல்லாம் — எங்கள்*
*இன்பத் தமிழ் மொழிக்கே தருவோம்*
*மங்கை ஒருத்தி தரும் சுகமும் — எங்கள்*
*மாத்தமிழ்க் கீடில்லை என்றுரைப்போம்.*
*சிங்கமென்ற இளங்காளைகளே மிகத்*
*தீவிரம் கொள்ளுவீர் நாட்டினிலே!*

*பங்கம் விளைந்திடில் தாய்மொழிக்கே — உடற்*
*பச்சை ரத்தம் பரிமாறிக்கொள்வோம்.*
*தூங்குதல் போன்றது சாக்காடு — பின்னர்த்*
*தூங்கி விழிப்பது நம் பிறப்புத்*
*தீங்குள்ள இந்தியை நாம் எதிர்ப்போம்*
*தித்திப்பை எண்ணிடப் போவதில்லை.*
*மாங்குயில் கூவிடும் பூஞ்சோலை — நமை*
*மாட்ட நினைக்கும் சிறைச்சாலை*
*ஏங்கவிடோம் தமிழ் தாய்தனையே — உயிர்*
*இவ்வுடலை விட்டு நீங்கும் வரை! (9.8.2002)*

*2002 ஆவது வருஷம் அவ எழுதின கவிதை. இப்போ ஃபைவ் ஸ்டார் படப்பாட்டு கேட்டுக்கிட்டு இருக்கேன். அனுராதா ஸ்ரீராமின் அற்புத இசை. ரயிலே ரயிலே ஒரு நிமிஷம், என் ரதியைப் பார்க்க நிற்பாயான்னு காதில் கொஞ்சுது. நட்பைப் பற்றி பேசியதும் காதல் ஜங்ஷனுக்குப் போயிடறேன். வாழ்க்கையே ஜம்ப் கட்டாகி ஓடுறதுதானே?*

*13*
*லவ் இன்ஃபினிட்டி*

## ஒவ்வொரு பொண்ணும் ஒவ்வொரு டேஸ்ட்!

*2002 ஆவது வருஷம் மறக்க முடியாத பல விஷயங்கள் நடந்தது.அதில் முக்கியமானது, ரஞ்சனி அக்காவைச் சந்திச்சது. இவங்களுக்கு கணவர் கிடையாது. பெண் குழந்தை மட்டும்தான். கவி மூலமாக கிடைச்ச நட்பு இது.*

*எங்கே நட்பு எனும் ட்ரெயினில் ஏறினோம்னா? நான் கவிதைன்னு ஈரோடு, அரச்சலூர், சிவகிரின்னு திரிஞ்சப்பவே வேதாத்ரி மகரிஷி எங்க ஊர்ல செம ஃபேமஸ். உடனே அவரோட கிளாஸ்ல சேருன்னு கவி பணம் கூட கொடுத்தா. சரி, என்னடா இதுன்னு கிளாஸ்ல சேர்ந்தேன். வித்தியாசமாக இருந்தது. அங்க சொன்ன பல விஷயங்களை பின்னாடி ஸ்டீபன் ஹாக்கிங் புக்ல படிப்பேன்னு நான் நினைச்சுக்கூட பார்க்கலை.*

*நான் காலேஜ் போனபோது, தாமரைப்பாளையத்துல வேதாத்திரி வகுப்புல சேர்ந்தேன். அங்கேயும் காதல் என்னை சும்மா விடலை. சுமதின்னு ஒரு பிளஸ்டூ படிக்கிற பொண்ணு வந்துக்கிட்டிருந்தது. ஊராளிக்கவுண்டர் வீட்டு புள்ள. வாளிப்புக்கு கேட்கணுமா. இந்த தடையெல்லாம் தாண்டித்தான் கற்கண்டு இனிப்பை நெத்தியில் தக்க வைக்க முயற்சி பண்ணினேன்.*

*முதலில் கண்களுக்குள் 89 வீடியோக்கள் ஓடி, சவீதா பீவி அன்போட அழைச்சாங்க. அவங்களுக்கு அப்புறம் உங்கள பார்க்கிறேன்னு சமாதானம் சொல்லி அனுப்பிட்டு தியானம் முதற்கொண்டு காயகல்பம் வரை போனேன். ஆனா சுமதி, சீக்கிரமே என்னை அவளோட பெட்ரூம் வரை கூட்டிப்போக பார்த்தா. அவங்க அப்பாவோட எக்சர்ஸைஸ் செய்யாத சிக்ஸ்பேக் உடம்பை பார்த்ததிலிருந்தே சுமதியை தங்கச்சியாக பிக்ஸ் ஆகி செட் ஆகிட்டேன்.*

*முதல்ல பாசநேசமா பேசி சுமதிகிட்ட நெருங்கினேன். அப்ப அவங்கப்பாவ நான் நேர்ல பார்க்கல. பார்த்தப்புறம் எண்சாண் உடம்பு நடுக்கத்த மறைக்க முடியல. தியானம் முடிச்சப்புறம் எங்கூட பேசறக்கு ஒருநாள் குரோட்டன்ஸ் பக்கம் நின்னுக்கிட்டிருந்தா.*

*தினசரி தியானம் செய்துவிட்டு பால் சொசைட்டியில் பால் வாங்கிட்டுப் போவது எனது குடும்பக்கடமை. சொல்ல மறந்துவிட்டனே. சுமதியின் வீடும் போகிற வழிங்கிறதால கூடவே பேசிக்கிட்டு வருவா. எல்லாமே தி.ஜானகிராமன் கதையில் வர்ற பெண்கள் கேட்கிற கேள்வி. பதில் சொல்ல முடியுமா, உனக்கு வீட்டுல யாரு இஷ்டம், பொண்ணுங்க எத்தனைப் பேரு ஃப்ரெண்டுனு இடையறாத கேள்வி. முழுமையான பெண்ணா மெல்ல மாறிக்கிட்டிருந்தா. ஈஸ்ட்ரோஜன் வேகம் அவளை அந்த பாடுபடுத்துச்சு.*

*முதல்லேயே சொன்னேன் இல்லியா? எனக்கு விதிவிலக்கே கிடையாது. பொண்ணுங்கன்னாவே எனக்குப் பிடிக்கும். அவங்கள எப்படி யோசிப்பாங்க, என்ன கேள்வி கேட்பாங்க, அதுக்கு என்ன பதில் சொன்னா எப்படி அடுத்த கேள்வி வரும், நாம் எதிர்பார்க்கிற பதிலை எப்படி கொண்டு வர்றதுன்னு மனசுக்குள்ள பேசிக்கிட்ட போவேன்.*

*நெல்லிக்காய், இலந்தைப்பழம், கச்சாயம், போண்டா,வடைன்னு சுமதி தனக்கு எது கிடைச்சாலும் எனக்கு கொண்டு வந்து குடுப்பா. என்ன பிரியமோ… என்னால அதை எப்படின்னு வகைப்படுத்த முடியல. கிளாசில் சேரும்போது, வேண்டாத விருந்தாளியைப் பார்க்கிற மாதிரி பார்த்தா. அப்புறம் ஒரு மாசத்துல நான் சைக்கிளைத் தள்ளிக்கிட்டே வர முன்னாடி பேசிக்கிட்ட போவா. கேள்வி கேட்டு பதில் வரலீன்னா சட்டுன்னு திரும்பி பின்னாடி பார்ப்பா.*

*நான் அப்போ மோகனா, மைதிலி, ரூபான்னு எந்த மோடில இருந்தாலும் ஸ்டேண்டர்டு மோடுக்கு வந்து சுமதியைப் பார்த்து சிரிப்பேன். மாநிறத்தில் கூர்மையான முகம். சிரிச்சா மட்டும் தெய்வீகம், முறைச்சா காளி தேவி மாதிரி. ஒருமுறை காலேஜ் ஃப்ரெண்டு (பொண்ணேதான்), அருணாவைப் பார்த்து குமார் ஜெராக்ஸ் கடையில் நின்று தம் அடிச்சுக்கிட்டே பேசிக்கிட்டிருந்தேன். அன்னைக்கு கேட்டா பாருங்க அடுக்கடுக்கா கேள்வி. சாமி, மலைச்சு போயிட்டேன்.*

*14*

*லவ் இன்ஃபினிட்டி*

***பீகேர்ஃபுல் ஆண்களே!***

*நீங்கள் நான் பேசுவது, யோசிக்கிறது இதையெல்லாம் வெச்சு பெரிய ஸ்த்ரீ லோலன் அப்படியெல்லாம் யோசிச்சிருப்பீங்க. ஏன்னா அதுதான் நம்மோட இயல்பு, ஒருத்தரை பார்க்கும்போதே டிரஸ், முகம், தலை சீவியிருக்கிறதுன்னு கணக்குப்போட்டு கேரக்டரை செட் பண்றது. ஆனால் நான் இதில் எதிலயும் வரமாட்டேன். சேரமாட்டேன். ஏன்னா, நான் கும்பலாச் சேர்ந்து காரியம் செய்றதைவிட தனியாக செய்யணும் என்பதுதான் என்னோட பேராசை.*

*சுமதி, கிராமத்துப் பொண்ணுதான். என்னோட ஒப்பிட்டா அவ கேள்வி மூலமாகவே நிறைய தெரிஞ்சு வெச்சிருந்தா. பிளஸ்டூ படிக்கிறான்னா அவ உடம்பு பத்தி அவளுக்கு தெரியாதா என்ன, பீரியட் வரும், அதுக்கு நாப்கின் யூஸ் பண்றதுன்னு அவளும் அப்ப தொடங்கியிருந்தா. அவளச் சமாளிக்கிறதுல எது கஷ்டம்னா, அவ ஒரு இடத்துல இருந்தான்னு வெச்சுக்கோங்க. எதேச்சையா நானு அங்க இருந்து தொலைக்கிறேன். உடனே என்னைக் கண்டுபிடிச்சு, கவனிக்க ஆரம்பிச்சிருவா. அவள் முழு உடம்பிலும் கண்கள் முளைச்சா மாதிரி பார்க்கிறான்னு என்னோட ஆறாவது அறிவு கண்டுபிடிச்சிடும். நேரா பாத்தா, அவளோட வேலையைப் பாத்துக்கிட்டு இருக்கிறாப்புல தோணும். பெண்கள் மல்டி டாஸ்க்கிங் ராணிகளாச்சே.*

*இன்னைக்கு பாதுகாப்புக்காக கவர்மெண்ட் ஏராளமான காமிராக்களை பொருத்திட்டாங்க. ஆனா கண்காணிப்புங்கிறத நாம யாருமே விரும்பறதில்லை. இரவில் வெளிச்சத்தைப் போல. சின்ன டெமோ, ஒருத்தரோட போன்ன, ஜஸ்ட், பஸ்ஸில போகும்போது எட்டிப்பாருங்க. உடனே அவரு தன் போனை மறைச்சுப்பாரு. அதோட முகத்தில அசாதாரண கோபத்தையும் காட்டுவாரு. ஏன்? நமக்கு வீட்டுக்கு ஏன் கதவு வந்ததுங்கிறதுக்கான ஆதாரமே அதுதான். பிரைவசி.*

*அன்னைக்கும் அப்படித்தான் நான் கூடப் படிச்சவகிட்ட தம் அடிச்சிக்கிட்டே பேசினத பாத்துட்டா. தம் அடிக்கிறது ஓகேம்பா. அந்த மணத்துக்காகவே என் கையப் புடிச்சுக்கிட்டு நடக்கிறது அவளுக்கு புடிக்கும். ஆனா, இன்னொரு பொண்ணுங்கிறத யாரு சகிச்சுக்குவா. உடனே அவகூட இப்படித்தான் பேசுவியா, என்னென்ன விஷயங்களை*

பேசுவீங்க, நீங்க ரொம்ப குளோசா, கிஃப்ட் எல்லாம் குடுத்திருக்கீங்களா, நைட் மெசேஜ் பண்ணுவியான்னு தேங்காயைத் துருவ ஆரம்பிச்சுட்டா. ஆனா அத்தனையும் கேட்டுட்டு அவ நிம்மதியா களுக்குன்னு சிரிச்சுட்டு போயிருவா.

எனக்குத்தான் சொன்ன பொய் எத்தனை, அதுல மொத பொய் என்னன்னு ஞாபகம் வெச்சுக்க வேண்டியிருக்கும். இந்த நாடகத்தை நாங்க ஃப்ரெண்ட்ஷிப்புங்கிற பேர்ல பண்ணிக்கிட்டிருந்தோம்.

ஒருநாள் அவ கோட்டைக்காட்டு வலசு பக்கத்திலிருக்கிற காட்டுக்கு போறன்னு எதேச்சையா சொன்னா. அப்படியான்னு அசிரத்தையா கேட்டேன். ஏய் நானே அங்க போறன்னு சொல்றேன். நீ என்கூட வர்ற சான்ஸ் பத்தி யோசிக்காம, அப்படியாங்கிறயா ன்னு பிலுபிலுன்னு புடுச்சிக்கிட்டா. அப்புறம் அடுத்தநாள் தாமரைப்பாளையம் வரை வந்தேன். அவள் கவர்மென்ட் ஸ்கூல் சந்தில் நின்னுக்கிட்டிருந்தா. எந்த இடத்திலும் அவ பதட்டப்பட்டதே இல்லை. எந்த உணர்ச்சியும் காட்டாத முகம் ஆச்சரியம். அப்போதுதான் நெஞ்சுல முட்டிக்கிட்டு எழுந்த மார்புகளைப் பார்த்தேன். இருகண்கள் போதாது ராசாத்தியின் அழகைப் பார்க்க....பிஜிஎம் உள்ளே ஓடியது. கைகள் படப்பட பழுக்கும் பழம் என கே.என்.எஸ்ஸின் புதிர்கள் உள்ளே 70 எம்எம் படமாக விரிந்தன. அந்த நினைப்பில் களைத்து மைதிலி உள்ளே புகுந்தாள். இவ ஏன் இங்கேன்னு கேட்கிறதுக்குள்ளே தங்கம்னு வார்த்தை வெளியே வந்துருச்சு.

தங்கம், யாரு அது ?

அப்போதுதான் தெரிந்தது. ஐயையோ அடப்பாவி வாய்விட்டா சொன்னேன். சமாளிப்போம். ஏறுவெயிலில் கழுத்துப்பக்கம் வேர்வை வழியத் தொடங்கி, இடுப்பின் வலதுபுறத்தில் இறங்கி டிஎஸ்பி ஜட்டியை நனைத்தது. காப்பாத்துடா டிஎஸ்பி கருடா. அது ஏதோ வேற நினைப்புல சொல்லிட்டேன். சும்மா...

இல்ல, உங்கூட படிக்கிற பொண்ணா, சொல்லு..

இல்லப்பா.. விடேன்...

சரி, நீ என்னை எப்போவெல்லாம் நினைச்சுப்பே..

ஏய், லூசு நீ என் ஃப்ரெண்டு.. டெய்லி மூணு தடவை நினைக்கிறதுக்கு நீ என்ன மாத்திரையா என்ன?

போப்பா உனக்கு கிண்டல் ஜாஸ்தி, சுதா சொன்னா பசங்க லவ் பண்ற பொண்ண நினைச்சு கைவேலையெல்லாம் பண்ணுவாங்கன்னு... நீ செய்வியா?

உன்னை கெடுக்கறதே அந்த சுதாதான். சு காம்பினேஷன்ல ப்ரெண்டு வேண்டாம் சுமா,...

ஹேய் என்ன சொன்னே, சுமா.. சுமா..

சுமதி சும்மா சொன்னேன். சுமான்னு ஒரு ஃப்ளோவுல சொன்னேன்.

இனி நீ இப்படியே கூப்புடேன் சூப்பராக இருக்கு. என்று சொல்லி முடித்தபோது, தாமரை மெட்ரிக் பள்ளியை தாண்டி வந்துவிட்டோம். கழுத்தில் சுமதியின் பூனை முடியைப் பார்த்தேன். வெயிலில் மின்னியது. முழு பெண்ணாக மாறி குடும்ப போட்டோ எடுக்க, உடல் கிண்ணென கனக்க இரண்டு வருஷம் போதும்.

எப்போது குறும்பு புன்னகை முகத்தில் மின்ன பேசுவது சுமதியின் வழக்கம். வட்ட முகத்தில் புருவங்கள் அடர்த்தி. கீழ் உதட்டில் அழுத்தமான மச்சம் கம்பீரமாக இருந்தது. சிரிக்கும்போது, இடது உதட்டை மெல்லியதாக மடித்துக்கொள்வாள்.

எனக்கு அதுவரை பெண் தோழிகள் என்றால் சீதா, லல்லி, பரமேஸ்வரி ஆகியோர்தான். இதுவும் பதினொன்றாம் வகுப்பு முதல் பனிரெண்டாவது வரை இரண்டு ஆண்டுதான். அதற்கு முன்னாடி பொவ்வீலை போடும் ஆயாவும், நொனை பேசும் அம்மாவும்தான் தோழிகள். ஸ்கூலில் படிக்கும் பொண்ணுகளோடு கிளாஸ் தாண்டி நட்பெல்லாம் எங்கள் ஊரில் சாத்தியமே கிடையாது. நையப்புடைத்து குஞ்சை குறுகத் தரித்து விடுவார்கள்.

அவ்வளவு எதுக்கு? எங்க அப்பனுக்கு தெரிஞ்சா, ஆன் தி ஸ்பாட் தூக்கிப்போட்டு முதுகெலும்பை ஒடைச்சுப் போடுவார். அதுக்கும் மிஞ்சினா, நட்பைத் தொடர்ந்தால் எங்கள் ஊரில் விளக்கு கம்பத்தில் கட்டி முதுகுப்பூணை கழற்றி விடுவார்கள். நடக்குமா?

நல்லாயிருக்கீங்களா அம்மணி? நல்லதுங்க என பொதுப்படையாக பேசிவிட்டு நகர்ந்தீர்கள் என்றால் உடலுக்கும் மானத்திற்கு பாதுகாப்பு.

*15*

*லவ் இன்ஃபினிட்டி*

***வர்ஜினிட்டி போச்சு!***

*சுமதி தன்னோடு கருத்தை தெளிவா சொல்லிட்டா. உண்மையில் அவளோட ஆர்வம் வேற வகையில் யோசிக்க வெச்சாலும் நான் யூ சர்டிஃபிகேட் வாங்கின பையன். அந்த மாதிரியெல்லாம் கல்யாணத்துக்கு அப்றம்தான்னு சொல்றவன்.*

*ஆனால் என்னோட கூட்டாளி கில்டி குணா, மீட்டர் வட்டி வீட்ட ஜெகன்கிட்ட மூவாயிரம் ரூபாய் காசு வாங்கிட்டுப் போய், பிரம்மச்சரியத்தை உடைத்து எங்க வயித்தெரிச்சலை சம்பாதிச்சான். அப்போ அங்க இந்த விஷயத்துல ஃபேமஸா இருந்தது, திட்டுப்பாறை ஸ்வேதாதான்.*

*இதையெல்லாம் என்னோட ஃபிரண்டு மங்கை முருகன்கிட்ட சொன்னா சிம்பிளா ஒரு த த்துவம் சொன்னான். கோவம்தான். பட் அவன் சொன்னதுல ஒரு நேர்மை இருந்துச்சு பல்லு இருக்கிறவன் பக்கோடா திங்கிறான். விடு. அரிஸ்டாட்டில் இடத்துல மங்கை முருகனை நானா தூக்கி உட்கார வெச்சேன்.*

*ரைட்டுன்னு விட்டுட்டா.. எங்க ஆண்மையின் பெருமை என்னாவறது சொல்லுங்க...இதுக்காகவே பக்கத்துட்டு வீட்டு பாம்பே லோகு அண்ணன், சுப்ரமணி அண்ணன்கிட்ட ஆலோசனை கேட்போம். பொதுவாக நமக்கு அடுத்தவங்க ஐடியா கேட்டாங்கன்னா சாணக்கியன் லெவலுக்கு ஃபீல் பண்ண ஆரம்பிச்சிருவாங்க. சுப்ரமணியண்ணன் அப்படி ஒரு ஆளு. அவரு பேர நாய்க்கே வெச்சு ஆசையாக கூப்பிடலாம்னு நினைச்சேன். ஆனா, அது பெரிய சண்டையக் கொண்டுவந்து வுட்ருமுடான்னு எங்க ஆயா சொன்னதால உறவுப்போர் ஏற்படாமல் தவிர்க்கப்பட்டது.*

*எங்க சனத்துல எல்லாம் வேகம்தான். யோசிக்கிறது படுவேகமாக இருக்கும்னா வேல பார்க்கிறது எப்படி... எங்க ஊட்டு பொம்பளையாளுக வார்த்தையே பேசிப்புடுவாங்க. வெந்தண்ணிய எங்க ஊத்திக்கிட்டானோ இந்த தண்டுவன்னு. அதையெல்லாம் கேட்கிறதுக்கு கூட எனக்கு அப்பெல்லாம் டைமில்லை.*

*2*

*போன்ல பேசறதுக்கு அப்பன் குடுக்கிற காசு பத்தாது. அதனால சேசாயி நோட்டுப்பேப்பர்ல எழுதித்தள்ளுறது, இருபது வயசுல கம்யூனிஸ்டாகி போராட்டி எங்க வம்சம் என்ன சொல்லும் அப்படின்னு சமூக கவிதைங்கிற கெரகத்தையும் எழுதினேன். நடுவுல பிரேக் வுட்டா சுமதி, மைதிலி எல்லாம் உள்ளே புகுந்துருவாங்க. உடனே எனக்கு ஒரே குழப்பமாயிரும். ஸ்டாலினா, ஷாலினியா, மைதிலியா கோர்ப்பசேவா, லெனினா, லதாவா ன்னு உளறிக்கிட்டே திரிஞ்சேன். ஆத்தா, எழுகாண்டியம்மனை வேண்டிக்கிட்டு, தின்னீற பூசிவிட்டுட்டு போய்க்கிட்டே இருக்கும். எப்படி நாசூக்கா இன்சல்ட் பண்றா கிழட்டு முண்டைன்னு நெனைப்பேன். ஆனால் பாசம் நமக்கு ஆல்டைம் டிலைட்தானே!*

*ஆனாலும் ஆயா, கறிச்சோறு போடுலீன்னு போடற நொனைச் சண்டையெல்லாம் எனக்கு ஆகாது. நான் லீவு கிடைச்சா கவியைப் பார்க்க ஈரோடுக்கு எஸ் ஆயிருவேன். இல்லீனா, அப்பன் தேங்காயை உரிச்சுப்பழகுன்னு குமட்டுல குத்துவாரு. அடுத்து, கருப்பண்ணன் தேங்காய் மில்லு கணக்கெழுதுனா செலவுக்கு ஆவுமேன்னு கல்வி வேலை வழிகாட்டி ஆகி காமெடியெல்லாம் பண்ணுவாப்புல.*

*எனக்கு இப்பத்தான் கமலா, துர்க்கா, கஸ்தூரின்னு பேசறக்கு லேடீஸ் பட்டாளம் ரெடியாயிருக்கு. ஜாலியா இவங்களைப் பார்க்க ஏடாகூட மூர்த்தி, சின்னிஸ் ராஜ்குமார், குமரேசன்னு செட்டுசேர்ந்து சைட் அடிக்க போறதுதான் பொழுதுபோக்கு. கூடவே 'ஏ' மூர்த்தி மூலமாக முரடன் செந்தில் அறிமுகமானார்.*

*அங்கதான் எனக்கு ஸ்டோர்மி டேனியல்ஸோட பழக்கமாச்சு. இங்கிலீசுகாரிகிட்ட நான் என்ன பேசப்போறேன். ஜஸ்ட் பாக்கத்தான். உலகச்சாதனை எல்லாம் கிடையாது. அஜூக்கு குமுக்குத்தான் செக்ஸ் நடிகைப்பா. எனக்கு ரெண்டு நிமிஷம் பார்த்தாலே அன்னைக்குப் பூரா பொங்கலோ பொங்கல்தான். இவரு வீட்டுக்குப் போய் இரண்டே வாரத்துல பூங்காவனம் படக்குன்னு கேள்வி கேட்டா. டேய் ஏண்டா ஜட்டியெல்லாம் அசிங்கம் பண்றா. நாத்தம் தாங்க முடியலடா. அவ கேப்பா. ஏன்னா, எங்க அம்மா கேட்காம இருப்பாளா? அதனால மாசத்துக்கு ஒருமுறை மட்டும் அங்க போய் சர்வீஸ் பண்ணிக்கறது வழக்கமாச்சு.*

*செந்திலண்ணன் வித்தியாசமான ஆளு. கல்கத்தாவுல வேல பாத்துக்கிட்டிருந்துட்டு அம்மா, அப்பா மர்கயா ஆனப்புறம் தமிழ்நாட்டுக்கு ரயில் புடிச்சு வந்தாரு. ஊரே கோமணம்*

கட்டிக்கிட்டு திரிஞ்சப்போ, ஹேன்ஸ் பிராண்டுல ஷார்ட்ஸ் மாட்டிக்கிட்டு மனுசங்க மட்டுமில்லை எருமைமாடுகளைக்கூட மிரள வெச்சாரு. மாடு மட்டுமல்ல மனுசங்க கூட இதப்பார்றா புது ஜீவராசின்னு நெனச்சிருப்பாங்க.

*3*

செந்திலண்ணனுக்கு விவசாயத்தையும் ஐரோப்பா ஸ்டைல்ல பண்ணனும்னு ஆசை. ஆனா, கிராமத்தாளுங்க இவரை படிச்ச கோமாளியாத்தான் பாத்தாங்க. ஆனா, சார் ஊருல இருக்கிற எந்த புள்ளையையும் காதலிக்காம விடல. ஆளு, கருகருன்னு ஆறடி உயரம். கோழிக்குஞ்சு மாதிரி இருக்கிற புள்ளைங்க எல்லாம் அண்ணன் தலையைப் பார்த்ததும் கருப்பணசாமி மாதிரின்னு நெனைச்சிக்கிட்டு பயந்து ஓடுனாங்களே தவிர காதல் கருமம் எல்லாம் வரல. எல்லாம் மூஞ்சி ராசி.

செக்ஸ் படம் பார்க்க போன சாக்குல, ’ஏ’ மூர்த்தி, பக்கத்து தொண்டுப்பட்டில சாணியள்ளுன பவிதாவ உஷார் பண்ணிட்டான். காலேஜ் போகும்போது, எங்கங்க தொட்டான், சேட்டை பண்ணான்னு சொல்லி எங்கள அடிக்கடி பாத்ரூம் போக வெச்சான். ஆனா கிளைமேக்ஸ் மட்டும் நடக்கல. வெறும் ஃபிங்கரிங்குத்தான் அனுமதியாம். டக்குன்னு சொந்தத்துல மாமன் வந்ததும் கல்யாணப் பத்திரிகை கொடுத்துட்டா. மூர்த்திக்கு கல்யாணம் அப்படிங்கிறதுல பெரிய நம்பிக்கையில்லை. ஏன்னா அந்தப்பொண்ணு அவங்க சாதிதான்.

நண்பர்களான எங்க வேலை என்ன உசுப்பேத்துறதுதானேழ செஞ்சோம். லவ்வாவது மசிறாவது, அவ குமாரு, தண்டபானின்னு தேன் மிட்டாய் வாங்கிக் கொடுத்தாக்கூட பல்லக் காட்டுவா. நமக்கு இப்பவே ரிகர்சல் ஒண்ணு பாத்துட்டா ஃப்யூச்சர்ல யூசா இருக்கும்னு நெனச்சேன். மிஸ் ஆயிருச்சு. வுடு எங்க சொந்தக்காரப்பொண்ணு வனிதா இருக்கறா. மாமா, மாமான்னு காலச்சுத்திக்கிட்டு வருவா. பாத்துக்குவோம்னு அப்பவும் கெத்து உடாம பேசுனான்.

அந்த வருஷம் கொஞ்சம் சோகமான வருஷம். மாரியம்மன் மாதிரி பெரிய கண்ணு வெச்சிருந்த பொண்ணு சூர்யாவுக்கு, பஸ்சுல கூட வந்த ஏழுமலையோடு பத்திக்கிச்சு. ஸோ, பத்திரிகை அடிச்சு கல்யாணம் பண்ணி ஒரே வாரம் சூர்யாவை படிப்பை விட்டு நிறுத்திட்டான். காலேஜ்ல கேட்டதுக்கு அவளுக்கு விருப்பம் இல்லைங்கிறாங்க சார், நான் என்ன பண்ணட்டும் அப்படின்னுட்டான். முத்துப்பாண்டி, பக்கிரிசாமி சாருக்கெல்லாம் வருத்தம். நல்லாப் படிக்கிற புள்ளைன்னு புலம்பிக்கிட்டு இருந்தாங்க.

பழனிச்சாமி, மாரியப்பன், சிவசண்முகத்துக்கு வேற கவலை இருந்தது. சுமாரான பிகரே அது ஒண்ணுதான். அதுவும் போச்சேன்னு பொக்குன்னு மூஞ்சிய வெச்சுக்கிட்டு உக்காந்து இருந்தாங்க. என்னதான் இருந்தாலும் ஆண்டவன் போட்ட ப்ளூ பிரிண்டு நம்ம லைஃப், நாம எப்படி மாத்த முடியும் சொல்லுங்க.

*4*

*அடுத்த இரண்டாவது மாசம், இங்லிலீஸ்ல அரியராக வெச்சு சாதனை பண்ணிய பச்சையம்மாளும் கல்யாணம் ஆச்சு. கூட்டமாக பசங்க கல்யாணத்துக்குப் போய் கிஃப்ட் எல்லாம் வாங்கி கொடுத்து முக்கியமாக போட்டோ எடுத்துக்கிட்டோம். பெரிய ஃப்ரெண்ட்ஸ் எல்லாம் கிடையாது.*

*உன்னோட கவிதையெல்லாம் எனக்கு ரொம்ப பிடிக்கும்னு பச்சை ஒருமுறை சொல்லியிருக்கிறா. இவ உருவத்தை எப்படிச்சொல்றது? சீமெண்ணெய் பேரல் மாதிரி உடம்பு, கழுத்து, இடும்புன்னு எந்த வித்தியாசமுமில்லா மண்புழு மாதிரி உடம்பு. அவங்க அப்பா, முரட்டு தங்கச்சங்கிலி போட்டுக்கிட்டு லேபில செஞ்சா மிருகம் மாதிரி ஷேப்பில் வயிறு தள்ளியிருந்தார். கோடாரி மீசையை அவர் சம்சாரம் எப்படி சகிச்சிக்கிறாரோ என நினைத்தேன். சட்டென சிரிப்பு வந்தது.*

*சரி , இலக்கியத்திற்காக பாடுபடுவது தமிழர்களுடைய கடமை. இதோ நான் எழுதிய கவிதைகள்.*

*நீ காதலித்திருக்கிறாயா?*
*என்று என்னை எவரும்*
*கேட்டுவிடக் கூடாதென்றே*
*உன்னைக் காதலிக்கத்*
*தொடங்கிவிட்டேன் நான்....*

*.....*

*சுயமாய் பிணமாகும் வரம்*
*கிடைத்தது நீ பேசாதபோது....*

*நான் மணிக்காக*
*யாரிடம் பேசினாலும் ஒரு நொடி கூட*
*உன்னிடம் பேசும் சுகம் கிடைப்பதில்லையே ஏன்?*

*சத்தியமாய் நிலவைப் போல நீ இல்லை;*
*உன்னைப் போல்தான்*

அந்த நிலவு இருக்கிறது.

சப்தம் உன்
கொலுசில்..
சலனம் என் மனசில்.

காலங்காலமாய் என்
உயிரின் கரைதொட்டு
உன் ஞாபக நதிகள்
ஓடிக்கொண்டேதான்
இருக்கும்.....

வழக்கமாக நான் பக்கம் பக்கமாகத்தான் கவிதை எழுதுவேன். ஆனால் இது ஒரு புது முயற்சி. முயற்சித்திருக்கிறேன். படித்து காயம்படுங்கள். அதாவது, காதல் நினைவுகளால். ஓகே. வீடு தேடி கல் வீசக்கூடாது மக்களே.

*16*

*லவ் இன்ஃபினிட்டி*

***காதல் சொல்லிப் பழகு!***

*கவிதைகள் பற்றி பேசினேன் அல்லவா? அதுதான் என்னை உயிரோடு வைத்திருப்பதாக வெகுநாள் நினைத்திருந்தேன். ஆனால் அப்படி அல்ல; அம்மா போட்ட சோறுதான் என்னை அப்படி நினைக்க வைத்திருந்தது என பின்னால் தெரிந்துகொண்டேன். கவிதை எழுதுகிறவர்கள் கண்டிப்பாக காதலிக்கவேண்டும் என்பது என்ன விதியோ? நான் என் மாமன் பொண்ணு பிரியா முதற்கொண்டு காதலிக்க முயன்று தோற்றுக்கொண்டே இருந்தேன்.*

*ஒருத்தரை பிடித்திருக்கிறதென சொன்னால், அவர் என்ன சாதி என்பது முதல் கேள்வி. அடுத்து, அவர் சொந்த சாதி என்றால் பொருளாதாரம் குறுக்கே நந்தியாய் நின்றால் என்ன செய்வது? அப்போது காலேஜில் ஒரே ஆறுதல், ஏடாகூட மூர்த்திதான். காலையில் பேப்பர் போட்டுவிட்டு வேலைக்கு அசால்டாக வருபவன், படிப்பில் சாதிப்பான். ஆனால் எதுவுமே தெரியாது. சுறுசுறுவென ஓடுவான். நினைத்த நேரத்தில் மோட்டரோலா போனில் ஸ்டோர்மி டேனியல்ஸின் படத்தை மின்னலாக முடுக்கி பார்த்துக்கொண்டிருப்பான். எப்படிடா? அதெல்லாம் அப்படித்தான். என்பான்.*

*அவனுக்கு முரடன் செந்தில் பழக்கமானதிலிருந்திலிருந்து நிலைமை மாறிக்கொண்டே இருந்தது. சாப்பாட்டு கொண்டுவருவதையே ஒரு கட்டத்தில் மூர்த்தி நிறுத்திவிட்டு ரொட்டி, சோயாசங்க்ஸ் என வித்தியாச உணவுகளை கி.கி. கணக்கில் சாப்பிடத் தொடங்கியிருந்தான். சரி விடுங்க, நாம் அகல்யாவின்  கதையைப் பார்ப்போம்.*

*இவளை நினைத்துத்தான் கீழேயுள்ள கவிதைகளை எழுதினேன். வெயிலில் கறுத்துப்போய் எங்கவூரு புள்ளைகள் வாடிக்கிடக்க, இவள் நல்ல பெருங்கூட்டு பொம்பளைதான். உயரமும் வாளிப்பும் காலேஜையே பார்க்க வைத்தது. முகத்தை அல்ல; கழுத்துக்கீழே மட்டும். அப்படி ஒரு செழிப்பு.*

*இவளுக்கு நெட்டையன் பிரகாஷிடம் என்ன பிடித்திருந்ததோ, நேரே கரும்பங்காட்டுக்குள் புகுந்து கதகளி ஆடிவிட்டனர். மேட்டர் லேட்டாகத்தான் பிரின்சிபாலுக்கு தெரிந்தது. ?ஃப்ரூப் எங்கே? என தேட, வீடியோ ரெக்கார்ட் பண்ணலீங்க சார் என்று ப்யூன் பரமு சொல்ல, பற்களை நறநறவென கடித்தவர்*

அவங்க பேரன்ட்ஸை கூட்டிட்டு வரச்சொல்லுங்க என பஞ்சாயத்து நடந்தது.

இதைப்பற்றி பேசும்போது மூர்த்தி சொன்ன லாஜிக் அவனை ஜீன்ஸ்டீனாகவே நினைக்க வைத்தது.
"கரும்பங்காட்டுக்குள்ள ஃப்ரீயா கசமுசா பண்ண முடியுமா? கை காலெல்லாம் அரிக்காது" என அதிரடி கேள்வி கேட்டான்.
உடனே அவன் பெண்ணாக நடிக்க ,சிம்பா சரவணன் ஆணாக மாற கிளாசில் ஹோ என்ற சிரிப்புச்சத்தம் உச்சமேறியது.
கிருத்திகா மேம் ஏய் சத்தம் போடாதீங்கப்பா, நீங்க பாத்த வேலையில்தான் அங்க பஞ்சாயத்து நடக்குது. ..

இச்சையைப் பார்த்தா இலக்கியச்சாதனை எப்படி செய்வது?

இப்போது கவிதை

உனக்குப் பிடித்ததெல்லாம்

எனக்கும் பிடிக்க

ஆரம்பித்து கடைசியில்

என்னையே எனக்குப்

பிடித்துப்போனது.

என்னை காதலிக்கத் தொடங்கியதிலிருந்து

பரிசுப் பொருட்களே வாங்கித்தரவில்லை

என்கிறாய்

வருந்துகிறேன்.

உன்னை இந்த உலகில் சிறந்த

பரிசு எதையும் பார்க்கவில்லை என்பதற்காக!

அளவுக்கு மிஞ்சினால் அமுதமும் நஞ்சு

என்பதில் எனக்கு நம்பிக்கை இல்லை.

ஒவ்வொரு நொடியிலும் உனை சந்திக்கும் ஒவ்வொரு

முறையும் உன் மீதுள்ள காதல்

விஸ்வரூபமெடுத்துக் கொண்டுதான் செல்கிறதே!

எதிலும் நான்தான் முதல் என்றாய்.

ஒரு முத்தம் என்றேன்

ச்சீய் என்றாய்

அடடா முத்தத்திற்கு பதில் இன்னும்

கொஞ்சம் வெட்கத்தை கேட்டிருக்கலாமோ!

அன்பே

உனக்கு தாஜ்மஹால்

கட்டமாட்டேன்

தாலிதான்.

என் இதயத்துடிப்பின்

நானோ இடைவெளியிலும்

மறக்க முடியாது

உன்னை!
எனக்கு எல்லாமே நீதான்!
நீ இல்லாத ஒவ்வோர் நாளும்
தீதான்.

இப்படியெல்லாம் எழுதி நோட்டை மைதிலியிடம் கொடுத்தேன். அவள் மோகனாவிடம் கொடுத்திருக்கிறாள். இப்போது பாருங்கள். பேப்பரில் யாரைக் காதலிக்கிறாய். என்னிடம் மட்டும் சொல் என்று எழுதிக் கேட்கிறாள் மோகனா! என்ன பதில் சொல்லட்டும் மை டியர் மைத்து!

*17*

*லவ் இன்ஃபினிட்டி*

***காலம் வழிவிடுமா?***

*டயரியில்...*

*புதிரா புனிதா என்று நீங்கள் மனதிற்குள் பட்டிமன்றம் நடத்தலாம். ஆனால் என்னைப் பொறுத்தவரையில் நான் எனக்குப்பிடித்தத்தைத்தான் செய்து வந்தேன். அப்பா சொன்னார், சுப்பா சொன்னார் என்பதெல்லாம் நான் விரும்பவில்லை.*

*எனக்கு பெண்களை விதிவிலக்கின்றி பிடிக்கும் என்பதை முன்னாடியே சொல்லிவிட்டேன். ஆனால் எந்த பெண்ணை ரொம்ப பிடிக்கும் என்பதையும் லேசாக சொல்லிவிட்டேன். கடிதம் எழுதுவது, கடிதம் எழுதிய நோட்டைக் கொடுப்பது என நட்பு ஆண், பெண் இருவரிடமும் வளர்ந்து வந்தது.*

*25.2.2002*

*இந்த புள்ளியளவு எனக்கு உன் மனதில் இடமிருந்தால், போதும். Pongal சந்தோஷமாக கொண்டாடிக் கொண்டிருப்பாய். நீ Kavi யை மட்டும் பொங்கலுக்கு கூப்பிட்டாய். ஆனா என்னை கூப்பிடலை. அதனாலென்ன, பரவாயில்லை விடு.*

*நேரில் உன்னோடு பேசணும். என்னிக்கு அப்படிப் பேச சந்தர்ப்பம் அமையும்? பக்கத்தில் உன்னோடு அமர்ந்துகொண்டு நிறைய சண்டை போடணும். கவிதை, கதை, பூக்கள், பூமி, இந்த வாழ்க்கை, உன் வாழ்க்கை, உன் வீட்டு பருத்திச்செடி, உன் bus, பயணங்கள், உன் சந்தோஷங்கள் பற்றிப் பேசணும். நடக்கணும்னு இருக்கிறது நடந்தே தீரும். நடந்ததெல்லாம் நல்லாவே நடந்தது. இனி நடக்கப்போறது ரொம்ப ரொம்ப நல்லாவே நடக்கும் Ok?*

*நம் மனசில் காதல் பூக்கும்போது நடக்கிற வேதியியல் மாற்றங்களை எப்படி அளவிடுவது? பரபர உற்சாகமும், அதேவேகத்தில் தொண்டையை உறுத்தும் துக்கமும் எனக்கு புதிதாக இருக்கிறது. சரியா இது தவறா என்பது எனக்கு விளங்கவில்லை. ஆனாலும் இந்தப்பாதையில் எனக்கு பயணிக்கப் போகப் பிடித்திருக்கிறது. உன் கண்களின்*

வெளிச்சத்தில் நான் பயணிப்பேன. தனியாகப் போனால் நீண்டதூரம் செல்லலாம். மகிழ்ச்சியாக நான் உன்னுடன் நிம்மதியாக செல்ல விரும்புகிறேன். காலம் வழிவிடுமா?

*18*

*லவ் இன்ஃபினிட்டி*

***அன்பைத் தவிர வேறொன்றுமில்லை!***

*டயரியில் இருந்து...*

*உனக்கு கடிதம் எழுதும்போதெல்லாம் எனக்கு... நிறைய எழுதணும்போல இருக்கும். எழுதுவேன். ஆனாலும் எதிலும் நேர்த்தி கைகூட மாட்டேன்கிறதே. . இப்படி கிழித்து போட்ட காகிதங்களைப் பார்த்து எங்க அம்மா கூட திட்டினாள். நோட்டு வாங்கறதுக்கே சொத்த அழிச்சிருவே போல ன்னு. இதை ஸ்லோமோஷன்லே பாத்தேன். அம்மா கூட அம்புட்டு அழகு.*
*எல்லாமே உன்னால்தான். என்னை எப்படி இப்படி மாற்றினாய்?*
*26.2.2002 அன்று எழுதி உன்னிடம் கொடுக்காத கடிதம்.*

*உன் இல்லத்தில் உள்ளவர்களும், இதயத்தில் உள்ளவர்களும் நலமாக இருக்க வேண்டும் என்பதே இறைவனை நான் வேண்டிக் கேட்கும் வரம்.*

*இந்தக் கடிதம் நான் உனக்கு கொடுத்த கவிதை புக் உடன் சேர்ந்திருக்க வேண்டியது. காலம் தாழ்த்தி கிடைத்தாலும் பரவாயில்லை.*

*நான் உனக்கு கொடுத்த* Note *இல் எழுதியிருந்ததைப் படித்து பதில் எழுது. வழக்கம்போல் இல்லாமல் விரிவாக! ரைட்.. வெரி வெல், நன்றாகச் சாப்பிடு. உடம்ப பத்திரமா பாத்துக்க. அதிகநேரம் படிச்சு தூங்காம இருக்காத. பாரு, உன்கிட்ட பேசும்போது உன்னோடு அம்மாவா மாறிடறேன். ஆச்சரியம்தான் இல்லையா... எதிலும் நீதான்* first *ஆ இருக்கணும். ஓகே.*

*சனிக்கிழமை "ரோஜாக்கூட்டம் " போனோம். நான் செல்வா, சுபாஷ் எல்லோரும். நம் கதைதான் படம். சமீபத்தில் நமக்குள் நடந்த விஷயங்கள்தான் 75 சதவீதம் படத்தில் இருந்தது. எனக்கு ரொம்ப ஆச்சரியமாக இருந்தது.*
*மனசில் ஒண்ணு வெச்சிட்டு வெளிய ஒண்ணு பேசறதும் நல்லவன் மாதிரி நடிக்கிறதும் எனக்கு ஆகாது. மனசில இருக்கிற பேசிட்டி நடிக்காம அயோக்யனாக இருக்கிறதே* Better. *இந்த*

dialogue உனக்கு பிடிச்சிருக்கா. எனக்கு அவ்வளவு யதார்த்தமாக தோணுச்சு.
அப்புறம் இனிமேல் ரோஜாக்களை செடியோடு ரசிக்கிறதுதான் நல்லதுங்கிற முடிவுக்கு வந்திருக்கேன். நிறைய poetry எழுது. இப்ப எல்லாம் எனக்கு Time கிடைப்பதில்லை.
மனசுக்குள்ளேயே யோசிச்சு மறந்து விடுகிறேன். உன்னை உன் அருகில் இருப்பது போலவும், பேசுவது போலவும் கற்பனை பறக்கிறது.

நீ கோயிலுக்கு போனால் எனக்கு நல்ல புத்தியைக் கொடு என வேண்டிக்கொள். நல்ல மனசைக் கொடு என்று வேண்டிக் கொள். உனது பிரார்த்தனை பலிக்குமா என்று பார்ப்போம். உன் Sweet வாய்ஸைக் கேட்டு ரொம்ப நாளாச்சு!

விலக விலக புள்ளிதானே மிஞ்சும்!
நீ மட்டும் எப்படி விஸ்வரூபம்

ரா.பார்த்திபன் எழுதிய கவிதை இது.
டயரியை மூடி வைத்தேன். உண்மையிலே உலகில் தொண்ணூறு சதவீதம் பேர் சுய இன்பம் அனுபவிப்பவர்கள்தானாம். ஆனால் எனக்கு இதெல்லாம் பெரிதாக தோன்றவில்லை. ஜெ. எழுத்தில் காடு படித்தபோது, காதலிக்கிற பெண்ணை நினைத்து சுய இன்பம் அனுபவிக்க முடியாது என்று ஒரு வரி வந்தது. உண்மையோ, பொய்யோ பாமா புத்தகத்தை நேற்றுதான் வாங்கி வந்தேன்.

ஆசாரத்தில் அதை எடுக்கவும் ஆயா வந்து அடுத்த வார கறிக்கான பாட்டைத் தொடங்கியது. பாருங்க, ஆண்டவா கொஞ்ச நேரம் லவ் மூடுல இருக்க விடறீங்களா, என நொந்தபடி கடிகாரத்தை பார்த்தேன். மணி 9.30. நிலவு ஒளி வீட்டின் வாசலில் பொன் கொட்டியது போல ஒளிர்ந்தது. காலை எடுத்து வைக்க உடம்பே புல்லரித்தது. கேட்டைத் திறந்தேன். ஜீன் வேகமாக என்னையும் தாண்டி ஓடியது. டேய் நாயையும் மறக்காம கூட்டியாந்துரு, ரோட்டுல போறவங்கள கடிக்க ஆரம்பிச்சுரும் அந்த சில்லற நாயி. என அப்பா கத்தினார்.

ஜீன் எதற்கும் காதுகொடுத்து கேட்கவில்லை. பாய்ந்து பழனி கவுண்டரின் நெல் வயலில் குதித்து அலம்ப ஆரம்பித்தேன். எனக்கு ஏறிய வெறியில் கல்லை எடுத்து எறிந்தேன். எப்போதும் போல குறி தவறியது.

ஏனோ திடீரென பிருந்தா ஞாபகத்துக்கு வந்தாள். எப்போது வீட்டுக்கு வந்தாலும் என் மீது புகார் பட்டியல் வாசிப்பாள். பாருங்க அத்தை, நா வாங்கி பிரைஸ் ஸ்பூனை புடுங்கிட்டா ன்

மோகன். வாங்கித்தாங்க அத்தை என அடம்பிடித்து மாட்டி விட்டுட்டேன் பாத்தியா என்பாள். நான் அவளிடம் வாங்கிய அத்தனையும் சேகரித்துத்தான் வைத்திருந்தேன். யோசிச்சுப் பாருங்க, நமக்கு முதல்முதல்ல கொடுக்கிற பரிசு, நமக்கு கிடைக்கிற நட்பு இதெல்லாம் பொக்கிஷம் இல்லியா... அதெல்லாம் திருப்பித் தருவாங்களா என்ன?

அன்பைத்தவிர அவளுக்கு திருப்பித் தர என்கிட்ட ஏதுமில்லை. அப்படியே இட்டாலியில் நடந்துவந்து இடிந்துகொண்டிருந்த கிணற்றில் சுற்றி வந்து சிமெண்ட் திட்டில் உட்கார்ந்தேன். பாங் என ஒலியெழுப்பி பிஸ்கெட் பேக்கரி வண்டி முனையில் திரும்பி பாய்ந்தது. வேணி பெரியம்மா, வண்டியில் இருந்து இறங்கி வீட்டுக்குப் போனார்.

*19*

*லவ் இன்ஃபினிட்டி*

***காதல் சொல்லப் போறேன்!***

*நாம எல்லாத்தையும் படிச்சிருப்போம் தெரியும்னு நினைப்போம். ஆனா, உண்மை என்னன்னா, தேவைப்படும்போது அதனை மறந்திருவோம். நம் அனுபவத்துல பதிஞ்ச விஷயங்கள் மட்டும்தான் நம்மை எப்போதுமே காப்பாத்தும்.*

*மத்த விஷயங்கள் எல்லாம் நெருக்கடியான சந்தர்ப்பங்களில் நம்மை கைவிட்டுவிடும். இங்க அறிவுங்கறதும், அனுபவம்கிறதும் வேறுவேறு. நீங்க ஓஷோ, வேதாத்திரின்னு பல பண்டல் புத்தகங்கள ஷெட்யூல் போட்டு படிக்கலாம். இப்போ பாருங்க, காதலோ, காமமோ, ஒரு உறவு குறித்தோ நெருக்கடி வருது. அதில் எடுக்கிற முடிவு உங்க வாழ்க்கையை மாத்தப்போவுது. இதில நீங்க என்ன செய்ய முடியும்? உங்க அறிவு உதவும்னு நினைக்கிறீங்களா? நிச்சயம் இல்லை.*

*நான் சந்திச்ச எல்லா பெண்களிடம் நான் இந்த விஷயத்தைப் பார்த்தேன். அதாவது, நாம சாதிக்க முடியாததை இவன் சாதிக்கணும்னு ஒரு எண்ணம். தூண்டுதல் இருக்கு. ஆனால் அது ஏன்? அப்படி இருக்கணும்னு என்ன இருக்கு?*

*நான் அவங்களுக்கு எழுதின* letter *லேயும் அன்னைக்கு அப்படித்தான் எழுதியிருக்கேன். ஆகா வைரஸ் எப்படி பரவுது பாத்தீங்களா? ஓகே இப்போ, மைடியர் மைத்துவுக்கு எழுதின கடிதத்தை மறுபடியும் படிக்கப் போகிறேன். நீங்களும் என்னோட வாங்க!*

*டயரியிலிருந்து.....*
*உன் advise கேட்டு தெளிவாகினேன். எப்பவும் இந்த நிலைதான் நிரந்தரம்கிறது மட்டும் உண்மை. உன் அன்பிற்கு நன்றி சொல்லக்கூடாது. ஆதலால்ல, உன் அன்பை இன்பமாக ஏற்றுக்கொள்கிறேன்.*

*பிரிந்து இருப்பதால், நமக்குள் பிரிவோ, இடைவெளியோ இருக்க கூடாது. படிப்பில் நீ எப்படியும் ஜெயித்து விடுவாய். பெண்களை படிப்பில் மிஞ்சுபவன் எவனும் இன்னும் பிறக்கவில்லை. டைவர்ட் ஆகலீன்னா, பெண்களை எதிலும் டச்*

பண்ணவே முடியாது. டச் சேஸி சூடுடா நைனா ன்னு சவாலே விடலாம்.

ஆமாம். மறந்தே போனேன். நீயும் என்னை நினைத்துக்கொள்வாயா? இப்படிக் கேட்க கூடாதுதான். என்னமோ மனசில் ஒரு ஆசை. கேட்டுவிட்டேன். உனக்கு இருக்கும் எத்தனையோ Engagements இல் பரபரப்பில், சூழ்நிலையில் என்னையெல்லாம் நினைவில் கொள்ள உனக்கு நேரம் ஏது?

ஆனால் நான் அடிக்கடி உன்னை நினைச்சுக்குவேன். என்னைப் பார்த்து ஒரு புன்னகை கூட சிந்தக்கூடவா தோன்றாமல் போனது? பரவாயில்லை அதையெல்லாம் விடு.

நான் ஆனந்த விகடன் மாணவர் பத்திரிகையாளர் திட்டத்தில் சேரலாம்னு இருக்கேன். நானும் ஸ்ரீராமும்தான். அதிர்ஷ்டமா, திறமையான்னு சோதிக்கப் போறேன்.. வாய்ப்பிருந்தால் ஜெயிக்கலாம்.

முடிக்க மனசே இல்லை. ஆனால் Paper முடிந்துவிட்டது. அனைத்தையும் ஒருநாள் முடித்துத்தானே ஆகவேண்டும் பேபி. ஒகே tatatata.....

25 ஆம் தேதி எழுதின கடிதத்தில் நிறைய Changes செய்து 26 ஆம் தேதி மறுபடியும் இந்த பேப்பரில் எழுதினேன். பிழை, காலதாமதம் பொறுப்பாய் என நம்புகிறேன்.

அன்புடன்
உன்
மோகன்

உண்மையில் இந்த கடிதத்தை அப்போது எப்படி எழுதியிருப்பேன்னு நினைச்சா, ஆச்சரியமாத்தான் இருக்கு. என்ன சிந்தனையில் என்ன மாதிரி ரியாக்ட் பண்ணேன்னு பார்த்தா எனக்கு வெட்கமாக கூட இருக்கு. ஆனால் கடிதத்தை ஒண்ணும் பண்ண முடியாது. அது காலத்தின் சாட்சி இல்லையா?

அப்போ எனக்கும் மைதிலிக்குமான உறவு நட்பா, காதலா எந்த நிலையில் இருந்ததுன்னு தெரியலை. அருணா மேட்டர் தெரிய வந்த திலிருந்தே அவ, அதிகமாக என்கூட பேசறதில்லை. அதுக்கு நான் என்ன பண்ண முடியும்? அவளுக்கு பிடிச்சிருந்தது, விரும்பினவனுக்கும் ஓகே. இருவரும் லக்சு

சோப்பும் நுரையுமாக மாறியிருக்கிறார்கள். இதில் இவளுக்கென்ன பிரச்னையாமாம்.

அப்புறம், முக்கியமாக வாசு மாமா கல்யாணத்துக்கு போனேன். அப்பன் எப்பவும் கிடைச்ச வாய்ப்பை உடக்கூடாதுன்னு தங்க மோதிரம், கதர் வேட்டி, சட்டைன்னு மிடுக்கோட போய் அப்புறங்கண்ணுன்னு பேசி அட்டன்டன்ஸ் போட்டு ஸ்டேட்டஸ் அப்டேட் பண்ணிட்டாரு. இந்த விஷயத்துல எங்கப்பனை ஜெயிக்கறது என்னாலேயே ஆகாது.

அது ஒரு கணக்கு இருக்கு. இவன் இந்த கல்யாணத்துக்கு வந்தான். நம்மளப் பார்த்தான், பேசுனான்கிறதோட. நம்மோட விசேஷத்துக்கு வந்தானா, சரியா பேசுனானா, ஃபர்ஸ்ட் ரெஸ்பெக்ட் கொடுத்தானாங்கிற விவகாரமெல்லாம் பின்னாடியே வரும். இப்படி பார்த்ததாலதான் மனுசன் இன்னைக்கும் ஊரு விவகாரம்னா சம்பான எங்கப்பா ன்னு பிரசிடெண்டு கூப்படறாரு. சும்மாவா.. ஆனால வூட்டுக்கு ஒண்ணுன்னா போய் பாத்துக்க போ அப்படிம்பாரு. அம்மா, என்னைப் பார்ப்பா. நான் பல்லக்கடிச்சிட்டு அந்தப் பக்கம் போய்ட்டு அவர் செய்யற வேலையை செய்வேன். கடமைகளை எப்பவும் பிடிச்சிருக்கிறதோ இல்லையோ செய்யணும். ஏன்னா அதனால்தான் அது பேரு கடமை. பிடிக்காத விஷயங்கள்னு மரம் தன்னோட வேரை ஒதுக்க முடியாது இல்லையா?

இந்த நேரத்துல பிருந்தா வேற பாத்துக்க விசேஷத்துல எல்லாம் ஏதோ ஒரு சிக்னல்ல காட்டறா. கல்யாணத்துக்கு போய்ட்டு சாப்பிட்டு வெளிய வரும்போது ஐஸ்க்ரீம் திடீர்னு கண்ணு முன்னால் வருது. மாயாபஜார் சினிமாவான்னு பாத்தா. பிருந்தா, இந்தா சாப்பிடு உனக்காகத்தான் வாங்குனேன்ங்கிறா. என்னமோ அனைக்கு கத்தரிப்பூ கலரும் வெள்ளையும் கலந்த சுடிதார் போட்டிருந்தா. எனக்கு கத்திரப்பூ கலர் ரொம்ப பிடிக்கும். பெரும்பாலான பள்ளிக்கூட போட்டோவுல அதே கலர் சட்டையிலதான் இருப்பேன். மாமா எப்படி இருக்காங்க, அத்தைன்னு விசாரிப்பு வேற. அவ, அரச்சலூர்ல நவரசத்துல படிச்சிட்டிருந்தா. நான்தான் ஆர்ட்ஸ். அவ பிஎஸ்சி கம்ப்யூட்டர் சயின்ஸ். நம்ப முடியுதா? காலம் செய்யுற ஆச்சரியத்துல இதுவும் ஒண்ணு.

காலேஜ்ல அவளுக்கு லவ் லெட்டர் குடுத்த பசங்களப் பத்தி சொல்லிக்கிட்டிருந்தா. பெரிய அழகி கிடையாது. மாநிறத்தில திருத்தமான முகமாக இருந்தது. சிரிச்சா தெத்துப்பல் வலது புறத்தில் அழகு காட்டும். படர்ந்த முகம். சிரிப்பு சுனாமி மாதிரி அடையாளம் காட்டாம திடீர்னு வந்து மோதும் பாருங்க.. வாவ் சொல்லுவீங்க.

ஏய், என்னப்பா அப்படி பார்க்கிறே?

ஆண்களோட பிரச்னையே. டக்குன்னு ஏதோ நினைவுகளுக்குள்ள மூழ்கறதுதான். ஆனா, பெண்களிடம் நான் பொய், மெய் என ரெண்டுல எது சரியோ சிச்சுவேஷனுக்கு பொருந்துதோ அதைச் சொல்லுவேன்.

இப்போ நான் என்ன பதில் சொல்ல?

*20*
*லவ் இன்ஃபினிட்டி*

***காதல்வேலி நானும் கடந்தேன்!***

*பிருந்தாகிட்ட நான் என்ன சொன்னேன். நான் எதுவுமே சொல்லல. நீ அருகம்புல்லு மாதிரியான அழகின்னேன்.*

*சார், என்ன நான் பின்னாடி சுத்தும்போதெல்லாம் ரெட் சிக்னல் கொடுப்பாரு. இப்ப க்ரீன் கிடைச்சுரும் போலயே ன்னு சிரிச்சா.*

*கள்ளி!*

*ஐஸ்க்ரீம் அவளோட கழுத்தில இறங்கிறது தெரிஞ்சுது.*

*அவளுக்கு எல்லாமே தெரியும். எனக்கு தெரிஞ்சு கவிக்கு அடுத்தபடியா ஏதாவது கிஃப்ட் அனுப்பிக்கிட்டே இருக்கிற ஒரே ஜீவன் அவதான்.*

*திடீர்னு காலேஜூக்கு ஒரு பார்சல் வந்தது. எடுத்துப் பார்த்தா, சட்டை. இவளோட பேரும் நம்பரும் மட்டும் இருந்தது. எதுக்கு இதெல்லாம் பணறேன்னு கேட்டேன்.*

*ஐபிசி படி இதெல்லாம் தப்பா? ன்னு ஒரு கேள்வி கேட்டா. அசந்துட்டேன்.*

*அப்பவே முடிவுக்கு வந்துட்டேன். இது ஸ்கூல்ல படிச்சப்ப பார்த்த பிருந்தா இல்லன்னு. என்ன அப்டேட். வேகம். அதனால்தான் சொல்றேன். பெண்களிடம் ஆண்கள் போட்டி போட்டு ஜெயிக்கவே முடியாது. அவர்களாக விரும்பினால் தோற்கிற மாதிரி தன்னைக் காட்டிக்குவாங்க. ஆனால் உண்மையில் தோற்கிறது ஆண்கள்தான்.*

*நீ படிக்கிற காலேஜ் புள்ளைங்க எல்லாம் மலைக்கு பக்கத்துல முருகன் கோயில் படிக்கட்டில உட்கார்ந்திருக்கிறத நிறைய முறை பாத்திருக்கேன். நீ அங்கே போயிருக்கியா?*

*ஒரே ஒரு நொடி என்னைப் பார்த்தாள். உடனே ஐஸ்க்ரீமை தின்றபடி, நீ கூட்டிட்டு போனா போயிருப்பேன்.*

*இப்படிப்பேசினால் நான் என்ன சொல்லுவேன்? சொல்லுங்கள்.*

பேசிக்கொண்டே உதட்டை ஈரப்படுத்திக் கொண்டிருந்தாள். ஐஸ்க்ரீம் அவ்வளவு ருசியா என்ன?

நீ என்னை கட்டிப்பிடியேன்.

ம்ஹூம் ?

போடா மக்கு!மக்கு
என்றபடி அவளே என்னை அணைத்தாள். பார்க்கிங் ஏரியாவில் இருந்ததால் பெரியளவு யாருக்கும் தெரியாது. கழுத்தில் ஸ்பின்ஸ் பவுடர் மணந்தது.

இன்னும் இறுக்கமா இறுக்கமா என காதில் கிசுகிசுத்தாள். என் கைகள் அவளின் இடுப்பைச் சுற்றிப் படர்ந்தன. உடல் முழுக்க பரவிய காதலால் அந்த நேரம் எனக்கு பிடித்திருந்ததா என்று தெரியாது. ஆனால் அப்படி ஒரு அணைப்பு அந்த நேரம் தேவையாக இருந்தது.

திடீர்னு மனதில் மைதிலி தோன்ற, கைகள் தானாகவே தளர்ந்தன. ம்ம் என மெலிதாக பிருந்தா சிணுங்கினாள். என்னாச்சுப்பா..பிடிக்கலையா.

இல்ல.. நான் முழுமையா இல்ல.

வேற யாரையாவது விரும்பறியா?
ஆமா!

நான் உனக்காக ஸ்கூல்ல இருந்து காத்திருக்கேன். உனக்கு புரியுதா?

நான் முழுமையா இப்போ இல்லை. அப்படி இருந்தாத்தான் உன்கிட்ட வருவேன். இன்னொருத்தவரை நினைச்சுட்டு இன்னொருத்தரோட வாழ முடியாது.

இதுதான் உன்கிட்ட பிடிச்ச விஷயம். நீ கிடைச்ச எதையும் ஏத்துக்கிறதில்ல. எதையும் நேரடியா பேசிடற குணம் பெரிய விஷயம். நீ அப்போ திரும்பி வரும்போது, உனக்குள்ள நான் மட்டும்தான் இருக்கணும் பாத்துக்கோ.

அவ்வளவுதான்.

*2*

*கவிகிட்ட எனக்கு பிடிச்சதே, அவகிட்ட நீங்க என்ன எதிர்பார்க்கிறீங்களோ அதை மட்டும் புரிஞ்சிக்கிட்டு செய்வா. எக்காரணம் கொண்டும் தேவையில்லாத விஷ யங்களில் தலையிட மாட்டா. அவளோட இங்கிதம் எனக்கு ரொம்ப பிடிச்சிருந்தது. ஆனா மைதிலி இந்த விஷயத்தில காணா மலைமுழுங்கி மவ. என்ன யோசிக்கிறான்னு தெரியாது. என்ன செய்யப் போறாள்னு ம் புரியாது. செவத்த சிறுக்கி மவ. அலைஞ்சு காய வைப்பா.*

*அத்தனை பிரச்னையிலும் கவி எனக்க கூடத்துணையா நின்னுருக்கா. எதுக்குன்னு தெரியல. அவ எனக்கு தோழியைத்தாண்டிய ஒரு உதவி செய்யும் கடவுளின் கரமாத்தான் பார்க்கிறேன்.*

*எந்தப்பிரச்னையிலும் அசராம தனக்குப் பிடிச்சத அவ செஞ்சா. இரண்டு மூணு காதல் தோல்வியிலும் கூட தானே சமாளிச்சு மீண்டு வந்தா. காதல் முறிவுங்கிறது பெண்ணால் ஆணுக்கு மட்டும் துக்கமில்லை. அந்த முடிவு அந்த ரெண்டு பேர்த்தோட பின்னாள் நட்பைக் காப்பத்தான்னு தெரியும் போது, அது வேற தன்மையா மாறுது. அவளோட படிப்பு எல்லாமே அவ மொதல்ல இருந்த தன்மையை இன்னும் வேற லெவலா மாத்துச்சு. அது என்னாலயே நம்ப முடியல.*

*3*

*எங்க அப்பன் எப்பவுமே சொல்லுவாரு. மேல் பாக்கெட்டுல பணம் வந்துருச்சுன்னா, குணம் கீழ்பாக்கெட்டுக்கு மாறியிரும்பாரு. அதுக்கு நெறைய உதாரணங்கள் எங்க ஊர்லயே உண்டு. இந்த விஷயத்துல கவி மாட்டல. அப்பன் என்னதான் பாசமாய் பேசறமாதிரி இருந்தாலும், கவனமாக இருக்கணுங்கிறத உடல்மொழில காட்டிக்கிட்டே இருப்பாரு.*

*சொந்தங்களால அவரு படாதபாடு பட்டாரு. வாழறதுக்கு வழியில்லாம கருக்கம்பாளையத்துல இருந்து புதுப்பாளையத்துக்கு வந்தாரு. வாழ்க்கை கொஞ்சம் நிலைக்கிறதுக்குள்ள அவரோட அக்கா தற்கொலை செஞ்சுக்கிட்டாங்க. பங்காளி சண்டையில பங்கு நிலமும் கவுண்டனுக பிரிச்சு எடுத்துக்கிட்டானுங்க. மிச்சம் ஒடைஞ்ச தெளுவுச்சட்டிதான் மிச்சம்.*

*அத்தனையிலும் எங்கப்பாக்கிட்ட இருந்தது உடம்பும், உழைப்பும் மட்டும்தான். நிறையப் பேரு உறவு, நட்புன்னு*

ஏமாத்துனாலும் போனாப்போகுதுன்னு எங்க அப்பா வேலை செஞ்சாரு. இன்னைக்கு அரிசிச்சோறு பருப்புக் குழம்பு ஊத்தி சூடா திங்கிறோம்னா அதுக்கு பின்னாடி அத்தனை அவமானம், தோல்வி, அழுகை, வலின்னு நிறைய விஷயங்கள் இருக்கு. இதையெல்லாம் ஏன் சொல்றேன். நான் வெறும் பிளேபாயாக மட்டும் இருக்க விரும்பலைங்குறதுதான். நான் எல்லார்த்தையும் கவனிச்சிக்கிட்டு அரவணைச்சு போக நினைச்சேன். எனக்கு பக்கத்துல இருந்தவங்கள காதலிச்சேன். அவங்க பெண்களாக இருந்தது தற்செயலானது. அதுக்கு நான் காரணம் கிடையாது. ரைட் .

நான் பழகுன சுமதிகிட்டயும் எனக்கு இன்னைக்கும் அவ கண்ணைப் பார்த்து நேருக்கு நேரா பேசமுடியும். நான் நேசிச்ச, என்னை நேசிச்ச பெண்களிடம் அப்படித்தான். எல்லார்கிட்டேயும் நான் விளக்கம் சொல்லல. சில பேர்கிட்ட என் சூழலை புரிஞ்சுக்க சொன்னேன். சிலரிடம் காலமே புரிய வைக்கும் விலகி வந்தேன். இந்த உலகில் யாரும் யாரை நம்பியும் கிடையாது. அவ்வளவுதான். தீண்டா திருமேனி புக்ல ஆர்.வெங்கடேஷ் எழுதியிருப்பார். நட்போ, காதலோ ஒரு அலைவரிசை செட் ஆகணும்னு. அது சின்ன வார்த்தையாக இருந்தாலும் அவ்வளவு உண்மை இருக்கு அதுக்குள்ள.

*5*

அந்த நேரத்தில்தான் நினைக்கவே கஷ்டமான செய்தியும் கிடைச்சுது. மைதிலி பஸ்சில இருந்து விழும்போது, மயங்கி விழுந்திருக்கா. மூக்கில ரத்தம் வந்துருக்கு. செக் பண்ணப்போ, மூளை சம்பந்தமாக பிரச்னை ஒண்ணை சொல்லியிருக்காங்க.

மரபுரீதியான வர்ற நோய்ங்கிறதால காப்பாத்த முடியாதுண்டு சொல்லிட்டாங்க. எனக்கு உலகமே இருண்ட மாதிரி இருந்தது. அதுக்கப்புறம் நடந்த விஷயங்கள் எல்லாம் எனக்கு கனவு மாதிரி இருந்தது. அவ இறந்துபோனதை என்னால் ஏத்துக்கவே முடியலை. அவளோட இறுதிக்காரியத்துக்கு எல்லாருமே போனாங்க. என்னையும் வரச்சொல்லி வற்புறுத்துனாங்க. வேண்டாம் என்னை விட்டுங்கன்னு சொல்லிட்டேன். மைதிலி உயிரோட இருக்கிற பிம்பமே என் கண்ணிலும், மனசிலும் இருக்கட்டும். என்னால் அதற்கு மேல பலவிஷயங்களை எழுத முடியல. கிணத்துக்குள்ள குதிச்சு தண்ணிக்குள்ள முழுகி அழுதேன்.

*21*

*லவ் இன்ஃபினிட்டி*

***சுடச்சுட கையில் வாழ்க்கை!***

*இதுநாள் வரை மைதிலி ஏன் அவ்வளவு தூரம் விலகி நின்றாள் என்பது அந்த கணம் புரிந்துவிட்டது. என்ன செய்வது? காலம் கடந்துவிட்டது.*

*ஒருவாரம் மருத்துவமனையில் வைத்திருந்தார்கள். நான் நண்பர்களோடு ஒருநாள் போய் பார்த்தேன். மெலிதாக இருந்த தேகத்தில் உயிர் கபடி விளையாடிக் கொண்டிருந்தது. முகத்தில் அனைத்தும் முடியப்போவதற்கான நிம்மதி அதிகரித்திருந்தது. உடலில் புரிந்துகொள்ளமுடியாத ஒளி தெரிந்தது. நான் வெடித்து அழுதுவிடுவேனோ என்று பயந்தேன்.*

*மெல்ல சமாளித்து, மைதிலியின் பெற்றோர் முகம் பார்க்காமல் கவனமாக வெளியே வந்தேன். மருத்துவமனையில் நோயாளி மட்டுமல்ல, அங்கிருப்பவர்களின் முகங்கள் கூட இருள்சாயத்தில் முழுகிவிடுகின்றன. இருள்சாயத்தில் நம்பிக்கையின் ஒளியை எங்கே போய் தேட....*

*அவள் இறந்த மாதம் நவம்பர் வேறு. எனக்குப் பிடித்த மாதம் என்பதோடு, மழையின் ஈரம், மண்ணின் அணுக்களில் சொட்டிக்கொண்டே இருக்கும் நேரமும் அதுவே. மெல்ல கரைந்தழுந்துகொண்டே பைக்கில் காங்கேயத்தில் இருந்து பைக்கில் வீடு திரும்பினேன். பாப்பினி பிரிவில் என்னால் தாள முடியவில்லை. இறங்கிவிட்டேன். மழை, கண்ணீரைத் துடைத்து கீழிறங்கியது. இயற்கையின் கருணை அது என்பேன். அடுத்த ஒருவாரமும் எனக்கு, மைதிலியைப் பார்த்தது, பழகியது, எழுதிய கடிதங்கள் அனைத்தும் என் மூளையின் நியூரான்களை நொடிக்கு நொடி உடைத்துக் கொண்டிருந்தன.*

*வேறுவழியே இல்லை. திருவண்ணாமலை வினோத் அண்ணன் நினைவுக்கு வந்தார். அண்ணா, கொஞ்சநாள் அங்கே தங்கியிருக்க முடியுமா? என்று கேட்டேன். அவர் ஒகே சொன்னவுடன் கிளம்பிவிட்டேன். தேர்வு விடுமுறை. அடுத்து ரிசல்ட் வந்தவுடன் வேலையா, படிப்பா என்று தீர்மானிக்க வேண்டும். என் மனதில் ஏதுமில்லை.*

*2*

எங்கடா போற என்று அம்மா கேட்டதற்கு திருவண்ணாமலை கோயிலுக்கு என்று சொல்லிவிட்டு ஈரோடு சென்றேன். அங்கிருந்து சேலம் சென்றால் நேரடியாக திருவண்ணாமலை பஸ் உண்டு. வளைத்து வளைத்து ஓட்டியதில் உடல் முழுவதும் கடுமையான வலி. மனம் ஏற்கனவே தளர்ந்துபோயிருந்ததில் எதுவும் கண்ணுக்கு தெரியவில்லை.

செல்வா போன் செய்து பேசினான். மனசு வுட்ராதடா. அவ இறந்துபோனது விபத்து. உன்னை நம்பி அப்பா, அம்மான்னு இருக்காங்க. குடும்பத்துல படிச்சு வந்திருக்கிற முதல் ஆளு நீதான். நீ உடைஞ்சிட்டா உன் குடும்பமும் விழுந்திடும். பார்த்துக்கோ என்றான்.

வினோத் அண்ணாவின் வீடு, பெரிய மலையைப் பார்த்தபடி இருந்தது. அண்ணன் என்னைப் பார்த்ததும் கட்டி அணைத்துக்கொண்டார். முன்பே கிடைத்த லீவில் காட்டுப்பள்ளிக்காக வேலை செய்தோம். வினோத் அண்ணாவின் புராஜக்ட் ஒன்றுக்காக நானும் மலையேறி படாதபாடு பட்டு அப்பரண்டீசாக மாறியிருக்கிறேன்.

வீட்டில் அப்போது அண்ணன் மட்டுமே இருந்தார். லட்சுமி அக்கா அப்போது மும்பை சென்றிருந்தார். இரவில் ஒருமணி வரைகூட வினோத் அண்ணன் கண் விழித்து வேலை பார்ப்பார். நான் கதவுக்கு வெளியே உள்ள இடத்தில் மலையைப் பார்த்துக்கொண்டே சுவரில் சாய்ந்திருந்தேன். அப்படியே தூங்கிவிட்டேன். காலையில் எழுந்தபோது, அண்ணன் தோசை மாவு வாங்கிவந்து கல்லில் ஊற்றிக்கொண்டிருந்தார்.

“டேய் எந்திரி, சில இடங்களுக்கு போகவேண்டியிருக்கு. ரெஸ்ட் எடுக்கிறியா இல்ல என்கூட வர்றியா”

“கூடவே வர்றண்ணே”

மெல்ல சாப்பிட்டபடி அவர் தன்னுடைய போட்டோகிராபர் வேலையின் காமெடிகளை சொல்லிக் கொண்டிருந்தார். மெல்ல மைதிலியின் நினைவுகளிலிருந்து அண்ணாமலையார் என்னை மீட்டுக்கொண்டிருந்தார்.

வீட்டிலிருந்து அம்மா பேசினாள். என்கிட்ட ஒரு வார்த்தை சொல்லிட்டு போறக்கென்ன? கோயிலுக்கு போவேண்டாமுன்னு நான் சொல்லிருவன்னா என அப்பா வருத்தப்பட்டதை சொன்னாள். நான் அதற்கெல்லாம் மறுமொழி சொல்லவில்லை. ம் என்று கேட்டபடி வைத்துவிட்டேன்.

போளூர் சாலையில் காட்டுப்பள்ளி பாபுவின் வீட்டைக் கடந்தால் வினோத் அண்ணாவின் வீடு. வாட்டசாட்டமாக நட்புக்கு ஏற்ற இணக்கமான ஆள்தான். நைனா என்றபடி வினோத்தை தழுவிக்கொண்டு பேசுவார். ஆனால் தான் யார் என்பதை எப்போதும் கவனத்தில் வைத்துக்கொண்டு நாம் எங்கு நிற்க வேண்டும் என்பதையும் நாசூக்காக சொல்லிவிடுவார்.

நான் வினோத் அண்ணாவை எப்படி நடத்துகிறார் என்பதைப் பார்த்தவுடனே புரிந்துவிட்டது. கழுத்தைச்சுற்றிய பாம்பு இதுவென மனதில் நினைத்தேன். அதுசரி, காடு என்பது அனைவருக்கும் வாழ்வதற்குத்தானே என விட்டுவிட்டேன். மாலை சரியும் வேளையில் மைதிலியின் நினைவுவரும். மெல்ல வினோத் அண்ணாவுடன் சிறுசிறு வேலைகளுக்காக அலைந்து திரிந்து திருவண்ணாமலை மெல்ல மனதில் படியத் தொடங்கியது.

*3*

அப்போதுதான் கவிக்குமார் அண்ணா அறிமுகமானார். ஒருவரின் வேட்டி இந்தளவு மஞ்சளாக இருக்குமா என்று எனக்கு சந்தேகமே வந்துவிட்டது. ஒரு மாதத்திற்கு முன்பு தூய்மையாக இருந்திருக்கும் சட்டை, வேட்டி. பேசியது முழுக்க இயற்கை, நம்மாழ்வார் என பேசி அயர வைத்தார். அத்தனை விஷயங்கள். இறுதியில் நாம் வாழும் வாழ்க்கை தவறு என்பதுதான் அவரது ஒரே கருத்து.

என் கையில் இருந்த காசு, திருவண்ணாமலையில் தீர்ந்துவிட்டது. கவிக்குமார் அண்ணாவுக்காக, ஒரு புக்கை மொழிபெயர்த்து கொடுத்தேன். அதற்கு இரண்டாயிரம் காசு கொடுத்தார். என்னால் ஏதாவது செய்யமுடியும் என நம்பிக்கை வந்தது அப்போதுதான். எழுத முடியும் என்று எனக்கு நம்பிக்கை வந்ததைவிட கவிக்குமார் அண்ணனுக்கு அதிக நம்பிக்கை இருந்தது. அப்புறம் என்ன, ஜீரோ டிகிரி என்ற இதழைத் தொடங்கினார்.

இதழில், பல்வேறு கட்டுரைகளை எடிட் செய்யத் தொடங்கினேன். தடுமாறிய இடங்களை சீர்திருத்த வேலைகள் பரபரத்தன. இத்தனைக்கும் வினோத்தின் கணினியை மட்டுமே வைத்து எடிட்டோரியல் செய்ய வேண்டிய வேலைகளை கவிக்குமார் அண்ணா செய்தார்.

*4*

வினோத் அண்ணாவிடம் பெரிய சேமிப்பு கிடையாது. வீட்டுக்கு வரும் நண்பர்களுக்கு சாப்பாடு போடுவது அவருக்கு கௌரவ பிரச்னையாக இருந்தது. நான் என்னிடமிருந்த பணத்தை சாப்பாட்டிற்கு கொடுத்திருந்தேன். நட்பாக இருந்தாலும் ஷேர் செய்வது நல்லதுதானே. பல நாட்கள் ஹோட்டல், சாமிநாதன் டீக்கடை என அழைத்துச் சென்று சாப்பாடு வாங்கிக் கொடுத்திருக்கிறார். முடிந்தவரை அவர் ஒருநாள் என்றால் நான் ஒருநாள் என பணம் கொடுத்துவிடுவேன்.

எனக்கு சாப்பாடு, குழம்பு இருந்தால் போதும். ஆனால் வினோத் அப்படி சாப்பிடப் பழகியவரல்ல. சாப்பாடு எதைச் சாப்பிட்டாலும் சிப்ஸ், மிக்சர், காராபூந்தி என சாப்பிட்டு பழகியவர். அன்றைக்கு என்ன நடந்தது என்ன தெரியுமா?

**சோறு முக்கியம் ப்ரோ!**

*வினோத் நல்லவர்தான். ஆனால் தான் இப்படி இருக்கிறோமே என்று நினைக்கும்போது பொங்கி விடுவார். கூட நாம் இருந்தால் எரிமலை லாவா நம்மீது கொட்டிவிடும் இல்லையா? அதேதான் நடந்தது.*

*எனக்கு எப்போதும் சாப்பாடு என்பதைவிட படிப்பு என்பது மீது தனிக்கிறுக்கு இருந்தது. அதற்காக வேலராம மூர்த்தி, பூமணி என்று யோசிக்காதீர்கள். நண்பர்கள் கொடுப்பதை எனக்கு படிக்கலாம் என்று நம்பிக்கை தரும் நூல்களை படிப்பேன். இதனால் ஏற்படும் அவமானங்களை, கிண்டல்களைப் பற்றியெல்லாம் அணுவளவும் கவலைப்படாதிருந்தேன். அது அப்போது.*

*அன்று நன்றாகத்தான் விடிந்தது. சரியாக வியாழக்கிழமைகளில் அதுவும் ஒன்று. நான் கையில் இருந்த வேலை செய்து கிடைத்த பணத்தை சாப்பிட்டு, டீ குடித்தும் கரைத்திருந்தேன். கூடவே தங்கியிருந்த வினோத் அண்ணாவின் நண்பர், சாரங்கிநாதன். என்ன வேலை, ஏதோ பிசினஸ் செய்து நஷ்டமாகி விரக்தியில் இருந்தார். அங்கே வினோத் அண்ணாவின் வீட்டில் ஒருவாரமாக டென்ட் அடித்துவிட்டார். என்னைப்போலவேதான். ஆனால் முடிந்தவரை ஒரு வார்த்தை பேசுகிறாரா என்றால் கிடையாது. சாப்பிடும்போது மட்டும் பார்க்கலாம். மற்றபடி ஜோதிட புத்தகங்களை படித்துகொண்டிருப்பார். டிவி ஜோதிடர்களின் நிகழ்ச்சிகளைப் பார்த்துக்கொண்டிருப்பார். என்ன ஆசை அவருக்கு, டிவி ஜோதிடர் ஆவதே அவரது வாழ்க்கை லட்சியம்.*

*பொதுவாக நண்பரின் வீட்டுக்கு செல்கிறீர்கள் என்றால் என்ன செய்வீர்கள்? வேலையை நீங்களும் ஏதோவொன்று ஏற்று செய்வீர்கள் அல்லவா? சாரங்கி, பூப்போட்ட லுங்கியைக் கூட அவுந்திருச்சு கொஞ்சம் கட்டிவிடேன் என்று பிறரைக் கேட்கும் சொகுசு மனிதர். சில நாட்கள் நானும் கூட நினைத்தேன். சோறு ஊட்டிவிடக்கேட்பாரோ, லுங்கியை கட்டிவிடவேண்டுமோ என்று. நல்லவேளை பேரிடரிலிருந்து நான் தப்பித்தேன்.*

*இதற்கிடையில் மைதிலியின முகம் வேறு மாலைவேளைகளில் நினைவில் அட்டையாய் ஊர்ந்தது. அப்படி நினைவில்*

வரும்போது பச்சையம்மன் கோவிலுக்கு அருகிலுள்ள பாலத்தில் சென்று உட்கார்ந்துவிடுவேன. மாலை வெயிலின் சூடு மெல்ல புட்டத்தை சுட்டு இடுப்புவரை ஏறும்.

*2*

அன்று டீக்குடிக்க சில்லறைக்காசுகளைப் பொறுக்கி சென்றோம். தொப்பி பாபு, டீக்கு பணம் கொடுத்தார். என்ன அதற்காக அவரின் கலை ஆர்வப் பேச்சுக்கு காது கொடுத்தே ஆகவேண்டும். இல்லையெனில் என்ன நைனா என நையாண்டி செய்ய தொடங்கிவிடுவார். ஆள் பார்க்க நீட்டான ஆள் மாதிரி தெரிந்தாலும் ஈகோ விஷம் அதிகம்.

வினோத் அண்ணாவிற்கு சில உதவிகளைச் செய்து கொடுத்து அவரை காக்கை இயக்கத்திற்கு பயன்படுத்திக்கொளவதே அவரின் பிளான்.

இதனை கவிக்குமார் மகிழ்வுடன் ஆதரித்தார். காக்கை அமைப்பின் ஊடக ஒருங்கிணைப்பு இவர் பொறுப்பு. என்ன வேலை ஐடி காரர்களிடம் போய் அவர்களை குற்ற உணர்வுக்கு உள்ளாகும்படி பேசுவது, அமைப்புக்கு விலையின்றி வேலை செய்யும் ஆட்களை உருவாக்குவது, அதோடு நிதியையும் சேர்த்துப் பெறுவது. இதைத்தான் அவர்கள் செய்துகொண்டிருந்தார்கள். எனக்கு இது கட்டக்கடைசியில்தான் தெரிய வந்தது. அப்போது எனக்கு அவசியமாய் ஒரு வேலை தேவைப்பட்டது. அதற்கு வேலை செய்த அனுபவம் வேண்டுமே? இதழியல் படித்திருந்தால் கூட டக்கென ஒரு சம்பளம் பேசி போயிருக்கலாம். ஆனால் நான் படித்த படிப்பிற்கு எங்கு போய் பத்திரிகை வேலை வாங்கலாம் என்றும் தெரியவில்லை.

வியாழக்கிழமை அன்று, கையிலிருந்த இருபது ரூபாயை செலவழித்து விகடன் வாங்கிவிட்டேன். சாரங்கி, சப்ஜாடாக தக்காளியைக் கூட மிச்சமின்றி சாப்பிட்டாரே ஒழிய நயா பைசாவுக்கு ஊறுகாய் கூட எங்களுக்கு வாங்கித் தரவில்லை. வினோத்துக்கு அறிமுகமானவரின் அண்ணனாம். இடி அமீனின் தம்பி மாதிரி இருந்தார். நிச்சயம் ஓராண்டுக்கு முன்பு சிரித்திருக்ககூடும்.

என்னடா, இவரு மரியாதைக்கூட கையில இருக்கிற ஒரு ரூவாயைக்கூட தரமாட்டேங்கிறாரு. நாம என்ன காமதேனுவா, இவருக்கு குடுத்திட்டே இருக்கறக்கு என புலம்பிவிட்டார் வினோத். ஆனாலும் எதுவும் மாறவில்லை.

சாப்பாட்டிற்கான காய்கறிகளை அரிந்துகொடுத்துவிட்டு விகடன் படிக்க உட்கார்ந்தேன். குழம்பு, ரசம் என்றாலும்

வினோத் மறக்காமல் காசு போட்டு வாங்கும் சமாச்சாரம் காராபூந்தி, மிக்சர், முறுக்கு என ஏதோவொன்று இருக்கவேண்டும். இல்லையெனில் அவரை ருத்ரனாகவே பார்க்கவேண்டும். எனக்கு அது எப்படி தெரியும்?

சாப்பிடும்போது தெரியவில்லை. பாதியில் திடீரென சிப்ஸ், முறுக்கும ஏதாவது இருக்குதா என்றார்.
இல்லைண்ணே எதுவுமே வாங்கிட்டு வரலியே
ஏன்டா?
அண்ணே, அரிசி, தக்காளிக்குத்தான் பணம் இருந்தது.
அப்போதும் சாரங்கி அமைதியாக சாப்பிட்டுக்கொண்டே இருந்தார்.

உனக்கு விகடன் வாங்கறக்கு மட்டும் பணம் இருக்குது, நூறு கிராம் காராபூந்தி வாங்கியிருந்தா நல்லா இருந்துருக்குமே என்றார்.

நீங்க முதல்லேயே சொல்லிருந்தா யாருகிட்டயாவது காசு வாங்கியிருக்கிலாமே?

போடா, நான் இப்படியெல்லாம் முறுக்கு, மிக்சர், பூந்தி இல்லாம ஊரில் சாப்பிட்டதேயில்லை என்று சொல்லும்போதே கண்ணில் கண்ணீரின் தடம் தெரிந்துவிட்டது. எப்போதும் ஆக்ரோஷமாக ஒவ்வொன்றுக்கும் பதில் பேசும் புகைப்படக்காரர்தான் அழுகிறாரா என்று எனக்கு தெரியவில்லை.

நான் எது பேசினாலும் அவர் ஏற்றுக்கொள்ளப்போவதில்லை என்று தெரிந்துவிட்டதால், நான் பதில் பேசவில்லை.

சாரங்கி டிவியில் தெரிந்த பிம்பத்திலேயே மனம், உடல் இரண்டையும் குவித்திருந்தார். அவரின் காதுள்ள கல் சித்திரம் விரைவிலேயே டிவி ஜோதிடர் ஆகிவிடுவார் என்பதற்கு சாட்சி. அவர் மீதான கோபத்திற்கு நான்தான் கடத்தியா?

பின் மெல்ல சாப்பிட்டு கைகழுவியபின், என்னை அழைத்தார் வினோத் அண்ணா.

டேய் தம்பி குவாவாடிஸ் வரை வேலை இருக்கு. வண்டில ஏறு

சரிண்ணே

எங்களைச் சுமந்த வண்டி போரூர் சாலையில் சீறத்தொடங்கியது.

*23*

*லவ் இன்ஃபினிட்டி*

***காதல் இதயத்தை உடைத்தேன்!***

*திருவண்ணாமலையில் கவிக்குமார் எனக்கு கற்றுக்கொடுத்தது பலரையும் எப்படி வேலை வாங்குவது என. பேசிப்பேசியே ஒருவரின் மனதைக் கரைத்து…அவரின் இயல்பை சின்னாபின்னமாக்கி இயற்கையே எல்லாம் என நம்ப வைப்பதை மிக இயல்பாக செய்து வந்தார். ஏறத்தாழ சதுரங்கவேட்டை நாயகனைப் போல என்று வைத்துக்கொள்ளுங்கள்.*

*திடீரென காலையில் பக்தி பெருகும்போது காக்கை அலுவலகத்திலிருந்து நடப்போம். பாதி தூரம் வந்ததும், நடக்க வேண்டாம். டைம் இல்ல என ஷேர் ஆட்டோ பிடிப்பார். இதெல்லாம் இரும்புக்கை மாயாவின் ஆக் சன் வேகத்தில் நடக்கும். அதேசமயம் கார்த்திக்கின் ஸ்க்ரீன் பிரிண்டிங் ஆபீசில் இருந்து சுமக்க முடியாத அளவு புத்தகங்களை, சரவணா ஸ்டோர் பையில் சுமக்க வைப்பார். அவரும் கூடவே சும ப்பார் என்று வையுங்கள். அப்போது ஆட்டோ நிச்சயம் தேவைப்படும் சூழல். ஆனால் நடந்தே போகலாம் என்பார்.*

*திருவண்ணாமலை பகலில் இருப்பது போல இரவில் இருக்காது. அதன் முக்கிய வருமானமே அண்ணாமலையார் கோவில்தான். நாள்தோறும் கூட்டம் குவிந்துகொண்டே இருக்கும். கிரிவலம் போய்க்கொண்டே இருப்பார்கள்.ஆனால் இதில் முக்கியமானது, இரவுகளில் சாரை சாரையாக செல்லும் கூட்டம்.*

*பஸ்ஸ்டாண்டைத் தாண்டிச் சென்றால் ஒரு ஜங்ஷனாக சாலை ஒன்று வரும். அதில் வண்டியில் சென்றால், கார்த்திக்கின் கடை வம்சி புத்தக கடைக்கு அருகில் வரும்.*

*அதுதான் சென்னையிலுள்ள பஸ்கள் வரும் வழித்தடம். எப்போதும் கூட்டமிருக்கும். அதில் புத்தகங்களை கைகளில் தூக்கியபடி நடப்பதை நினைத்துப் பாருங்கள். கவிதை எழுதுபவர்கள் எவ்வளவு குரூரர்கள் என்பதற்கு நான் உட்பட நிறைய சாட்சிகள் உண்டு. கவிக்குமார் நல்லவர் என்று சொல்ல முடியாது. தேனொழுகப் பேசுவார்; வாக்குறுதி கொடுத்துவிட்டு மின்னலாக மறைந்துவிடுவார். இதையெல்லாம் பின்னாளில்தான் அறிந்துகொண்டேன். குறைந்தபட்ச இழப்போடு தப்பித்தேன்.*

அப்போதுதான் மங்கை மலர் என்ற பத்திரிகையாளரைச் சந்தித்தேன். அவர் வழியாக சிற்றிதழ் ஒன்றுக்கு வேலைக்கு சேர்ந்தேன். அங்கு இருமாதங்கள் வேலை செய்தேன். நண்பர் குமரேசனின் கருணையால் அவரின் அறையில் தங்கும் வாய்ப்பு கிடைத்தது.

அப்போது கையில் இருந்தது வெள்ளை நிற சாம்சங் குரு. பிருந்தா ஆச்சரியமாக போன் செய்தாள். என்னை உண்மையாகவே பிடித்திருக்கிறதா என்று கேட்டாள். ஊர்கதைகளைப் பேசினாள். மிகச்சரியாக மேட்டருக்கு வந்தாள். நீ அவளை மறந்திட்டியா? இப்ப எல்லாம் ஓகேவா என்றாள். அப்போது அவள், ஈரோட்டில் செயல்பட்ட தனியார் பள்ளியில் டீச்சராக இருந்தாள். அறிவியல் எடுக்கிறாள் என்று சொன்னாள். எனக்கு தெரியலை என்று சொன்னதும் அழுதாள். அவளுக்கு வீட்டில் வரன் பார்க்கிறார்களாம். சூப்பர் என ஆர்வமிகுதியில் சொன்னதும், ஆண்மையை பழிக்கிற கெட்ட வார்த்தையைச் சொல்லி போனை அணைத்தாள்.

சரி வீட்டில் இப்படி ஒரு கேரக்டர் இருந்ததே மறந்து விடுவார்கள் என்று ஊருக்கு வந்தேன். தாடியோடு வந்ததால் அம்மா மிரண்டுவிட்டார். இருபது ரூபாய்க்கு ஷேவிங் பண்றது விக்குதே, அதை வாங்கி ரெண்டு இழுப்பு இழுத்துட்டு வருவானா, இப்படி பரதேசி மாதிரி வந்து நிக்கிறே? என காய்ச்சி எடுத்தாள். அவளை டைவர்ட் பண்ணுவதற்கு ஒரே வாய்ப்பு, சோறு. தயிர் இருக்குதா, சோத்தக் கொண்டா தாயி. ஈரக்கொலை எரியுது என்று சொல்ல அவளின் கண்களில் கண்ணீர் குளம் கட்டிவிட்டது.

அப்பனுக்கு எப்போதும் சமூக அந்தஸ்து பத்தித்தான் கவலை. பேரகான் செருப்பு போட்டு நடந்தவர், அதை ஆயுளுக்கும் கடைபிடிக்க நினைத்தார். ஆனால் சுரேஷ் கவுண்டர்,செருப்ப மாத்துடா சண்முகா, காசு இல்லாமலா இருக்கு. கல்லு மாதிரி செருப்பு வாங்கி போட்டுக்கிட்டு இருக்கிறே. பைக்கில வரும்போது இந்த ரப்பர் செருப்பை போட்டுக்கிட்டு வந்தா கண்றாவியா இருக்குடா என வாங்கு வாங்கென வாங்க, அன்றே செந்தில் முருகன் மளிகைக் கடையில் பேரகானின் ஆபீஸ் செப்பலை வாங்கிவிட்டார்.

வீட்டில் அப்பனுக்கு காசு கேட்காமல் இருந்தாலே போதும் என நினைத்தார் போல. எதுவுமே பேசவில்லை. இரண்டு நாள் இருந்துவிட்டு கிளம்பும்போது கேட்டார். காது வெச்சிருக்கியில்ல? நான் பதில் பேசவில்லை. கிளம்பிவிட்டேன். எனக்கு உண்மையில் வெட்கமாகவே இருந்தது. அதுவரையில் அடிக்கடி தோன்றிக்கொண்டிருந்த மைதிலியின் முகம்

நினைவுகொள்வது மிகவும் கடினமாகி வந்தது. அதேசமயம் பிருந்தாவின் முகத்தை இவ்வளவு நுணுக்கமாக பார்த்திருக்கிறேனா என்ற அளவில் அவளின் முகம் வெளிச்சம் கூடி வந்தது. சத்தியமாக, அதற்கு என்ன அர்த்தம் என்றே புரியவில்லை. ரூமில் அதற்கான பதில் தயாராக இருந்தது.

**காதலை இப்படியும் செப்பலாம்!**

உண்மையில் பிருந்தாவிடம் இரண்டு மாதங்களாக பேசவில்லை. திடீரென அவளிடம் பேசவேண்டுமென தோன்றியபோது, காக்கைகள் அமைப்பில் அதிகாரப் போட்டி தொடங்கியிருந்தது. ஓர் அமைப்பு, புகழ்பெறாதவரை காசு கிடைக்காதவரை யாரும் அதனைத் தலையில் தூக்கி திரியமாட்டார்கள். ஆனால் புகழடைந்து விட்டால் ஏற்றிய கிரீடத்தை கீழிறக்குவது கடினம். நான், என்னால் என்ற வார்த்தைகளை மெல்ல பல நாக்குகளிலிருந்து வரத்தொடங்கியவுடன் அங்கு இடத்தை காலிசெய்துவிட்டேன்.

அங்கிருந்தபோது போனில் டவர் கிடைப்பது கடினம். எனது சாம்சங் குரு, எப்போது முடங்கும் என்றே தெரியாத நிலையில் இருந்தது. இதனால் அங்குள்ள போஸ்ட் ஆபீசில் அஞ்சல் அட்டைகளை வாங்கி வீட்டுக்கு அம்மாவுக்கு மட்டும் கடிதம் எழுதி வந்தேன்.

அப்போது நான் தங்கியிருந்த இடத்தின் முகவரியை எழுதி அனுப்பினேன். ஏன் அப்படிச் செய்தேன். அப்பன் நம்ப வேண்டுமே? அதற்காகத்தான். அதை பிருந்தா வாங்கியிருப்பாள் என்று எனக்கு எப்படித் தெரியும்?

சாரங்கியோடு சமாளித்து நாட்களை ஓட்டுவதே சிரமமாகிக்கொண்டிருக்க, இந்து பத்திரிகை பழனிச்சாமி பார்சலோடு மேலேறி வந்தார். வினோத், நம்மாழ்வாரின் வீடியோக்களை தொகுத்துக் கொண்டிருந்தார்.

ஏப்பா, வினோத்து உனக்கு கொரியர் வந்திருக்குப்பா என மலர்ச்சியோடு வந்து நின்றார். கூட அவர் வீட்டு குழந்தைகளும் பரவசத்தோடு வினோத் வாங்கிய கொரியரைப் பார்த்துக் கொண்டிருந்தனர். அதன் பெறுநர் வேறுயாருமல்ல, நான்தான். பிருந்தாதான் அனுப்பியிருந்தாள்.

பார்த்த உடனே டேய் தம்பி உனக்குத்தாண்டா என்று சொல்லிவிட்டு பழனிச்சாமியிடம் சில வார்த்தைகள் பேசி அனுப்பினார். டிவி பார்த்துக்கொண்டிருந்த சாரங்கி, டிவி ஜோதிடரின் அரிய சொல் முத்துக்களை நோட்டில் குறித்து வைத்துக் கொண்டிருந்தார். வினோத் அண்ணாவின் வீடு மூன்று தடுப்பாய் பிரிந்திருந்தது. முதல் தடுப்புச்சுவரில் அவரின் கணினி அறை, இரண்டு டிவி உள்ள ஹால், மூன்றாவது

படுக்கை அறை, சமையல் அறை.அதைத்தாண்டி சென்றால் பூஜை அறை சிறியதாக இருந்தது. அவர் வீட்டின் கதவைத் திறந்தால் வீட்டில் சமையல் அறை முதலில் கண்ணில் படும்.

கடிதத்தை எடுத்துக்கொண்டு மாடிக்குப் போனேன்.

நீ இப்படி முரட்டு முட்டாளா இருப்பேன்னு நான் நெனச்சுக்கூட பார்க்கல. உன்னோட கேர்ள் ஃப்ரெண்ட மறக்கறக்கு அறுபது நாள் தேவைப்பட்டது. ஆனா, அதறகப்புறம் கூட என்னைக் கூப்புடத் தோணுல. நீ விரும்பற பொண்ணு பங்காரம், அப்ப உன்னைத் தேடி வந்த நான் என்ன அகங்காரமா?

எனக்கு வேலை இருக்கு. நீ தங்கியிருக்கிற இடத்துக்கு வந்தாலும் கூட என்னால வேல செஞ்சு உன்ன காப்பாத்த முடியும். சும்மா காசுன்னு சொல்லிட்டு இருந்தீன்னா.. சத்தியமாக இதயம் வெடிச்சுத்தான் சாவ. பாரு, இதுக்குத்தான் முன்னாடியே உன்ன நான் வீட்டுக்குக்கெல்லாம் கூப்பிட்டேன். அப்பவே பட்டாச பத்த வெச்சியிருந்தீன்னா, உன்ன கல்யாணம் பண்ணறதுக்கு ஒரு ஆதாரத்தை ரெடி செஞ்சிருக்கலாம்.

ஆனா நீ என்னடான்னா, நேர்மை அப்படின்னெல்லாம் பேசுற. நான் உன்னோட இடத்துல இருந்தன்னா, நிச்சயம் இதுக்கு செகண்ட் ஒப்பீனியன் எல்லாம் கேட்டுட்டு இருந்திருக்க மாட்டேன். அந்த நேரத்தை சந்தோஷமாக செலவழிப்பேன். ஓகே உன்னோட அந்த தன்மை எனக்கு பிடிச்சிருந்துது. ஆனா, நீ வேலை, சம்பளம்னு காலத்தை தள்ளிப்போடறதைப் பார்த்தா, மாசாமாதம் வர்ற பீரியட்டை நீ நிறுத்தமாட்டயோன்னு தோணுது. இன்னும் அஞ்சே அஞ்சு பீரியட்தான் உனக்கு டைம். அதுக்கு மேல நீதான் என் தற்கொலைக்கு காரணம்னு சொல்லிட்டு, ஊஞ்சலூர்ல வந்து ரயில்ல விழுந்துருவேன் பாத்துக்க. நீ சொல்றதுக்கு பம்மறதுனால நானே சொல்லிறேன். ஸ்ட்ரிக்ட்லி ட்ரூலி ஐ லவ் யூ.. இந்த எழுத்து மட்டும் பெரிதாக பிரஷில் எழுதியது போல இருந்தது.

உன்
பிருந்தா.

எழுதியது எல்லாம் ஓகே. நல்ல அப்சர்வேஷன்தான். இந்தளவு என்னை கவனிச்சு விகடன் போல மார்க் போட்ட ஒரே பொண்ணு இவதான் என்று நினைத்தபோது அடித்த காற்றில் கடிதம் படபடத்தது. ஐ லவ் யூ என்ற வார்த்தையை மூக்குக்கு அருகில் கொண்டு வந்து பார்த்தேன். ரத்தக் கவிச்சி. அட சண்டாளி முண்டை. நரம்பைக் கீது அறுத்துக்கிட்டாளா.. ஆகா

கன்ஃபார்மா கொடுமுடி ஸ்டேசன்ல பஞ்சாயத்து இருக்கு மாப்ளே ன்னு மனக்குரல் கேட்டது. இன்ஸ்பெக்டர் கமலக்கண்ணன் உடம்பு இருக்கிற சைசுக்கு குத்தினா, நம்ம பாடி தாங்குமா என்று யோசித்தபோதுதான். கடிதத்தின் பின்புறம் குறிப்பு ஒன்று கண்ணில் பட்டது.

லூசு ரொம்ப பயப்படாதே. மணிக்கட்டு நரம்பெல்லாம் அறுக்கல. பீரியட் ரத்தத்தை எடுத்து எழுதினேன். மரியாதைய வீட்டுக்கு வந்து பேசு. இல்லன்னா, சம்பு மாம்ஸ்கிட்ட நான் வந்து பேசியிருவேன்.

எனக்கு பயத்தில் உள்ளாடையிலேயே இரண்டு சொட்டு சிறுநீர் கசிந்துவிட்டது. இப்படி தீவிரமா லவ் பண்ணுவான்னு தெரியலையே. ஏதோ வீடியோ பார்த்துட்டு வந்து கட்டிப்பிடிக்கிறான்னுதானே நெனச்சேன். மனதுக்குள் புலம்பல் அதிகமாக, கவிக்குமார் தலையை கைகளால் சீவியபடியே மாடிக்கு வந்தார்.

தம்பி

அண்ணே

சாப்பிட்டியாப்பா?

நீங்க?

இப்பத்தான் சாப்பிட்டேன்.

வினோத்தான் பண்றான். நீயும் போய் சாப்பிடு. நைட் இதழ் சம்பந்தமாக ஒரு வேலை இருக்கு. செஞ்சிடலாம். நாளைக்கு நாம சாயந்திரம் புக்கை பிரஸ்ஸுக்கு அனுப்புறோம். ஓகே.

அந்த புக்கை தயாரிக்கும்போது, காக்கை அலுவலகத்திற்கு வாரத்திற்கு இருமுறைதான் போவேன். கரண்டு கிடையாது. வாடகைக்கு விட்டவருக்கு இதுவரை மூன்று மாத வாடகை பாக்கி. பீஸ் கட்டையை பிடுங்கி வைத்துவிட்டார். நான் இரவில் பெரும்பாலும் பழைய அலுவலகத்திற்கு போய் தூங்குவேன். அங்கு ஒரு சிறப்பு என்னவென்றால், சீக்கடி கடிக்கிறது என அடித்தால் பதினைந்து கொசுக்கள் அடிபட்டு வீழும். வீட்டின் குடித்த தண்ணீர் ஹரப்பா நாகரிகத்தைச் சேர்ந்தது போல. அப்படி ஒரு முக்கல் நாற்றம்.

மெழுகுவத்திகள்தான் படிப்பதற்கு துணை. சில செட்டுகளை வைத்து அந்த மாதத்தை ஓட்டினேன். திடீரென ஓனர உள்ளே லைட் தெரிந்தால், கதவைத் தட்டி வாடகை கேட்பார். ஒரே

பதில்தான். கவிக்குமார் சென்னையில் இருக்கிறார். வந்தவுடன் வாங்கிக் கொள்ளுங்கள்.

எந்த உணர்ச்சியுமில்லாத பீ ஆமை முகம் வீட்டு ஓனருக்கு, கண் இரப்பைகள் கீழே தொங்க, பெரிய பச்சைமிளகாய் மூக்கு. நங்கென்னு குத்திவிடலாம் என எனக்கு உண்மையாகவே நிறைய முறை தோன்றிவிட்டது. இருந்தாலும் அவருக்கு சுமாரான ஒரு ஸ்லீவ்லெஸ் போடும் நாற்பது வயது மனைவி இருந்தார். இதனால், பொதுநலன் கருதி வன்முறையை கைவிடும் சூழ்நிலை ஏற்பட்டது. அந்த நிலையில் பிருந்தா எழுதிய வாசகங்களை நினைத்துப் பார்த்தால் சிரிப்பதா அழுவதா என்றே தெரியவில்லை.

*25*

*லவ் இன்ஃபினிட்டி*

**காதல் சுவாசம் நானும் உணர்ந்தேன்!**

*ஆண்டவனின் அருள்தான் என்று சொல்லவேண்டும். அப்போது என்றோ அனுப்பிய இமெயிலுக்கு கதிர் பத்திரிகையிலிருந்து அழைத்தார்கள். அழைத்தவர் பெயர் கண்ணன். அன்று அடைந்த சந்தோஷத்தை பின்னொரு நாளில் அடைவேனா என்றளவு சந்தோஷப்பட்டேன்.*

*இத்தனைக்கும் நான் காக்கை அமைப்பில் மொழிபெயர்த்திருந்தது ஒரே ஒரு நூல்தான். அதற்கும் இரண்டாயிரம் ரூபாயைத் தாண்டி வேறு எதுவும் தரவில்லை. அங்கு வேலை செய்ததற்கு அதுவும் சரியாக போனால் எனக்கு என்ன மிஞ்சும்?*

*இதைப்பற்றியெல்லாம் கவிக்குமாரும் கவலைப்படவில்லை. நூறு பர்சென்ட் கலைஞன் பாபுவும் யோசிக்கவில்லை. என்னைப் பற்றி யோசித்து உருப்படுவானா என்று யோசித்தது மூன்று பேர்தான். என்னை பெத்தவர்கள், அடுத்து பிருந்தா. சோத்துக்கே சாகிறப்போ இவ வேற என எரிச்சல் மூலாதாரத்திலிருந்து முட்டிக்கொண்டு கிளம்பியது. ஆனால் இந்த பிரியத்தை உரிமையை கோபத்தை நீ காதலித்த ஒரு பெண்ணிடமாவது பார்த்தாயா என மனசாட்சி கேள்வி கேட்டது.*

*எப்படியோ, 120 ரூபாயைத் தேற்றி சென்னை வந்து சேர்ந்தேன். பத்திரிகை உலகை உய்விக்க சூரியன் வந்துவிட்டான் என்ற மிதப்பு தெளுவில் சுண்ணாம்பு உரைப்பு போல சுள்ளென இருந்தது. ஆனால் எதற்கும் அங்கே வேலையில்லை. ஆசிரியர் கர்ணன், முடிந்தளவு தள்ளி நின்றே பேசினார். நிறைய கேள்விகள் கேட்டார். புத்தகத்தை வாங்கிப் பார்த்தார். சாதியை அறிய நாசூக்காக அப்பா என்ன செய்றார் என்று கேட்டார்.*

*மரம் ஏறுறவருங்க என்றேன்.*

*ரைட். எப்போ வந்து சேருரீங்க. முடிஞ்சவரை சீக்கிரமா என்றவர்
எதுவுமே சொல்லவில்லை. உடனே வேலையில் ஆழ்ந்துவிட்டார்.*

தங்குவதற்கு பிரச்னையில்லை. காரணம், சென்னிமலை அருளானந்தம் அங்கு டிசைனராக இருந்தார். தம்பீ என அழைத்து பாசமோடு வடை வாங்கி கொடுத்து சாப்பிடுவதைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

எனக்குத் தெரிந்து பார்த்தவுடனே ஒருவனின் கண்கள் வழியாக மனதை ஊடுருவிப் பார்த்து பேசும் இவரின் டேலன்டை எங்குமே பார்த்ததில்லை. இவரிடம் எப்படி பேசுவது என இன்றுவரை நான் கற்றுக்கொள்ளவில்லை. நாம் மனதில் நினைத்துள்ள விஷயங்களை தெரிந்துகொண்டு அதற்கு பதில் சொன்னால் அந்த மனுஷனிடம் எப்படிப் பேசுவது?

வேலையில் சேர்ந்துவிட்டேன். நான் செய்த தப்பு உடனே கண்ணுக்கு தெரிந்துவிட்டது. நிறைய வேலைகளை மெல்ல கர்ணன் தலையில் கட்டினார். காரணம், அங்குள்ள யாரையும் அவர் நம்பவில்லை. வேலைகள் செய்ய அவர் நம்பியது ரிப்போர்டர் சிவனையும், கண்ணனையும்தான். மற்றவர்களை முடிந்தளவு ஊதாசீனப்படுத்துவதும், உதறுவதுமாக இருந்தார். வேலைகளை யாருக்கும் சொல்லித்தரும் திறமை கொண்டவர் அல்ல. ஆனால் குறைகளை நிறைய சொல்வார்.

ஆனால் என்ன செய்வது? எடிட்டர்.

வேலை முடிந்து வீட்டுக்குப் போக மணி ஒன்பது ஆகிவிடும். பாழாய்போன பஸ் 12 ஜி ஆடி அசைந்து அண்ணாமலையார் கோயில் யானை போல வந்து நின்றால், கூட்டம் தேன்பூச்சி போல ஒட்டிக்கொண்டிருக்கும். வேண்டாம் என உட்கார்ந்து போலாம் என்றால் நின்று கொண்டே செல்லத்தான் எனக்கு தலையில் எழுதியிருந்தது. இந்த நேரத்தில் திடீரென அதிகாலையில் நாலு மணிக்கு அப்பன் கூப்பிட்டார்.

சொல்லுங்கப்பா?

டேய் தம்பி, ஆத்தாவுக்கு ஒடம்பு நலுக்கமா இருக்கு! சட்டுன்னு வண்டியப் புடிச்சு வா.

ஐயோ, இப்பவா, லீவு குடுப்பாங்களான்னு தெரியலீங்கப்பா

ஏண்டா, ஆத்தா ஒடம்பு சரியிலீங்கறன். நீ என்னடா காரணஞ் சொல்லிக்கிட்டிருக்க. மரியாதையா வா.

என்ன இது. ஆத்தா ஒடம்பு சரியீல்லிங்கறதுக்கு எம்மேல ஏ இந்த கோபம் எனக்கு ஒண்ணுமே புரியலைதான்.

உடனே கிளம்பி அருள் அண்ணனிடம் சொல்லிவிட்டு கிளம்பும்போது மணி 5. 17 டி டீலக்ஸ் வந்தது. நிறுத்தவெல்லாம் இல்லை. மொட்டப்பனங்காடு கருப்பணசாமி காப்பாத்துன்னு சொல்லி தாவி ஏறினேன். டிரைவருக்கு அப்படி ஒரு சிரிப்பு. நமக்கு உசுரு ஆச்சே.

காலையில் ட்ரெயினில் கிளம்பும்போது எடிட்டருக்கு போன் செய்து மேட்டரை சொல்லிவிட்டேன். நான் சொன்ன மேட்டரு முன்னமே எழுதிட்டீங்க இல்ல ரைட் நான் பாத்துக்கிறேன் என பொறுப்பாக அவரே போனை வைத்து விட்டார். வாட் எ மேன்!

2

ஈரோட்டில் இறங்கின உடனே பஸ் கிடைக்க வேண்டுமா? அப்படி என்றால் நீங்கள் அரச்சலூர், அல்லது வெள்ளக்கோவில் வண்டிதான் பிடிக்கவேண்டும். கரூருக்கு போக வேண்டிய வண்டியைப் பிடித்து ஏறுவது கடினம். அதிலும் நின்று கொண்டேதான் போகவேண்டும். கரூர்காரன்கள் உட்கார்ந்த பின்னரே நாம் உட்காரவேண்டும். அதாவது இடம் இருந்தால், சீட் தென்பட்டால்.

எனவே சந்தேகமே வேண்டாம் நின்றுகொண்டேதான் போகவேண்டும். எனக்கு ஆத்தா உடம்பு நலம்பெறுவதில் பெரிய அக்கறை கிடையாது. ஏதாவது பணம் வெச்சிருந்தால் நல்லாருக்கும்போதே பிடிங்கிவிடலாம் என நைச்சியமாக பேசி வந்தேன். ஆனால் காரியக்கிழவி ஆச்சே. என் ராஜதந்திரங்கள் அனைத்தும் தோற்றுப்போயின.

அதற்குள் உடம்புக்கு ஏதாச்சும் ஆச்சுன்னா, பச்சைப் பெட்டியில் இருக்கிறத நானே எடுத்துக்கலாமா என்ற உரிமைப் பிரச்னைகளை நினைத்துக்கொண்டே வந்தேன். திடீரென உடம்பு நலிந்து பின் சரியாவது ஆத்தாவுக்கு இது எத்தனையாவது முறை.? கணக்கே மறந்துவிட்டது. அப்படி கண்டது கடியது என அத்தனை கறியையும் சாப்பிட்டு வளர்ந்த பாடி அது. முடியுமா? எமன்கிட்டேயே டாஸ் போட்டு பார்த்து விளையாடுவாள் அவள்.

ஆனால் அப்பன் சொன்னதில் உடனே வா என்பதுதான் உறுத்தலாக இருந்தது. எம்பிஎம்எஸ் நேர்வழி வர பஸ்ஸில் தொற்றினேன். மூன்று ஸ்டாப்புகள் கடந்து சோலாரில் உட்கார

இடம் கிடைத்தது. எப்படி ஆக்சிலேட்டரை மிதித்தாலும் 45 நிமிஷம் என்ற கணக்கு ஆகிவிடும்

இந்த நேரத்தில் பிருந்தா மேட்டர் வீட்டுக்கு தெரிந்துவிட்டதோ என்ற பயம் வேறு உள்ளே முளைவிட்டது. ஆகா தெரிஞ்சா, ஆன் தி ஸ்பாட் மூத்திரத்தை கொட்ட வெச்சிருவாங்களே. காதல், கல்யாணத்தைக் கூட விடுங்க. அப்பனோடு பராத்து கையில அடிவாங்கிறதைத்தான் தாங்கிக்கவே முடியாது. ஒருமுறை வீட்டுக்கு வராமல் சாயந்திரம் கிரிக்கெட் விளையாடினேன்னு கூட்டிட்டு வந்து வாசலில் ரப்புன்னு ஒண்ணு செவினில வுட்டாரு பாருங்க அடி. கண்ணாடி கிருட்டு கிருட்டுனு போயி சலதாரையில வுழுந்துருச்சு. பதட்டத்துல தரையில தேடினேன். ஈஸ்வரண்ணன்தான் கண்ணாடிய அங்கிருந்து எடுத்துக் குடுத்தாரு.

பொறி கலங்கி அண்டமே அதிர்ந்து போச்சுன்னா அது அந்த மொமண்ட்தான்.

வீட்டுக்குப் போய் தாளைத் திறந்தேன். ஜீன் எப்போதும்போல பாசத்துடன் மேலே தாவி ஜீன்ஸ்பேண்டையும் மண் ஆக்கினான். மூஞ்சியில் முகர்ந்து பார்த்து நக்க என்ன ஒரு துணிகர முயற்சி. சரியான கணத்தில் அதைத் தடுத்தேன். டெட்டாலை விட நம் கைகள் சக்தி வாய்ந்தவை என்பதை நம்புகிறவன் நான். வைரஸ், பாக்டீரியாவை சிம்பிளா செலவில்லாம தடுத்தேன் பார்த்தீர்களா?

ஆனால் அப்பன் அதையெல்லாம் பாராட்டவில்லை.

ஏண்டா, வீட்டுக்கு அந்த செவத்த புள்ளைய கூட்டிட்டு வந்தியே என்னாச்சு?

அந்தப்புள்ள தவறிருச்சுங்பா.

ஏண்டா? நீ லவ் லெட்டர் குடுத்ததுக்கா?

அப்பா..

செரி, அரச்சலூர்ல உம் மாமன் பொண்ணுக்கூட ஏதாவது கசமுசா நடந்துதா?

என்னப்பா இப்படிக் கேட்கறீங்க?

அவங்கப்பன் இங்க வந்து அப்படிப் பேசறான். ஈரோட்டுக்கு போறன்னு நீ பார்த்த வேலை இதுதான் இல்லையா? புள்ளைய கல்யாணம் பண்ணிக்கச்சொல்றான். என்ன பண்றே?

பொண்ணு ஒத்துக்கிச்சாப்பா?

அத நீதே போனு போட்டு கேட்டுச் சொல்லணும். ஏண்டா எல்லா வேலையும் பாத்துப்புட்டு பச்சக்குழந்தை மாதிரி நிக்கிறே?

அப்போதுதான் ஆயா, எந்திரிச்சு வந்தது.
அதெல்லாம் அவுங்க அம்மா வூட்டற பாடம். என்கிட்ட எப்பவாது பேசியிருக்கிறானா, முணுக் முணுக்குன்னு அவகிட்டயே பேசிக்கிட்டிருந்துட்டு ஓடிருவான் என பேச அப்பாவுக்கு கண்ணில் சிவப்பு ஏறியது.

உன்ன இப்படியே உட்டா நீ பொண்ணுகள கூட்டிட்டு வந்து அணிவகுப்புதா நடத்துவ. அந்த பொண்ணு உன்னத்தா விரும்பறன்னு சொல்லுதான். கொஞ்சம் செவத்த புள்ளையா பாத்திருக்கலாம். பேரப்புள்ளனாலு பளிச்சுன்னு பொறக்கும்.

குங்குமப்பூ சாப்பிட்ட கொழந்த செவப்பா பொறக்கும்பா?

அப்படியே அதை அப்ப உங்காசுல வாங்கி வரப்போற உம் பொண்டாட்டி வாயில ஊட்டு.
என்றவர், வெள்ளைச் சட்டையை எடுத்து போட்டுக்கொண்டு வெளியில் கிளம்பிவிட்டார்.

அப்புறம் என்ன? சொந்தக்காரி வேற. மூச் காட்ட முடியலை. கல்யாணம், சடங்குன்னு எனக்கு பீதியானாலும் பிருந்தாவுக்கு சாதிச்ச திருப்தி. பிருந்தாவின் அப்பா என்னை எங்கே பார்த்தாலும் தம்ஸ் காட்டியபடி நின்றார். இது என்ன குறியீடு என்று எனக்கு இதுவரையிலும் புரியவில்லை.

சொந்தக்காரங்க புதுசா வரும்போது முழங்கையில நங்குன்னு விலாவுல குத்தி அறிமுகப்படுத்தினாள்.

சொந்தம் தெரியாம இருக்கீங்க?
'ங்க' சேத்தறத்துக்காக நான் எலும்பை பறிகொடுக்க முடியாது. இல்ல இனி அப்படித்தான் கூப்பிடுவேன். வீட்டுல அப்படித்தான் சொன்னாங்க.

வீட்டுல சொல்றதைக் கேட்டுத்தான் நீ இதுவரை நடந்த? அதுதான் உனக்குப் பழக்கம் இல்லையா?

என்ன இப்படி லொள்ளு பேசறீங்க? இருங்க மாமாவை கூப்படறேன்.

வேண்டா, ரெண்டு தடவை சேத்திக்கூட நெஞ்சுல இடிச்சுக்க. அந்தாளை கூப்பிடாத. கடி தாங்க முடியாது.

3

இருட்டில் ஒண்ணுமே தெரியலையே.. எங்க என்ன பார்ட்டு இருக்குன்னே தெரியல. ஐய்யோ நெஞ்சு முடிய இழுக்காத...

ச்சீ... ஆபாசமாக பேசாதடா...

நெஞ்சுன்னுதான சொன்னேன். அட கெரகம் பிடிச்சவளே, நெஜமாலுமே ஒண்ணும் தெரியல. இந்த மேட்டர காலையில வெச்சுக்கலாமே...

காலையில வெளிச்சமாக இருக்குமே?

நைட்டுல கரும்னு இருக்குமே?

அப்போ எப்பத்தான் லவ் பண்றது?

அப்பன் ரூமு அப்படியே சென்னியங்கிரி ரைஸ்மில்லு மாதிரியே இருக்கு. இங்க ரொமான்ஸ் வர்றது எல்லாம் கே 1 பஸ், கரெக்ட் டைமுக்கு வர்ற மாதிரி. ரொம்ப கஷ்ட..ம்ம..ம்ம

சொல்லச்சொல்ல மொச்சக்கென முத்தி உதட்டை கடித்து இழுத்தாள்.

அடி ராட்சஸி....

செரி, செரி உனக்கு பெண் குழந்தை இஷ்டமா, பையனா? ஆஸ்பத்திரில ஆர்டர் கொடுத்து செஞ்சிருவமா? படுத்து பொரண்டு ஒரே கசகசன்னு..

ச்சீ .. போடா...

ஆஹா பூனை நகம் உனக்கு.. செரி கோபப்படாத.. எனக்கு பெத்த பிருந்தா சாயல்ல குட்டி பிருந்தா வந்தா போதும்.

ஏன்? எல்லாரும் பையனத்தான கேப்பாங்க?

பொண்ணுக்கு இருக்கிற துணிச்சல் பையனுக்கு கிடையாது. எனக்கு.. இல்ல நமக்கு பொண்ணு பொறக்கணுங்கிறதுதான் என் ஆசை.
என்னோட சாய்ஸ் எப்பவும் பெஸ்ட்தான் என மூச்சுமுட்ட என் கன்னத்தில் முத்தினாள்.

லவ் ஆல்வேஸ் இன்ஃபினிட்டிதானே!

நிறைந்தது.

**எதிர்வினைகள்**

*நீங்க என்ன செக்ஸ் ரைட்டரா, நானும் மேரேஜ் ஆகறதுக்கு முன்னாடி இப்படித்தான் சுய இன்பம் பத்தி நிறைய எழுதினேன். உங்களோட எழுத்து எனக்கு அதை நினைவுபடுத்திடுச்சு.*
*—மோகன்ராஜ், சென்னை*

*பதில்:*
*சுமதி, பாலியலைப் பற்றி சுதந்திரமாக பேசுவதுதான் கதையில் வருகிறது. மோகன் சுய இன்பம் அனுபவிப்பது பற்றி கதையில் எழுதவில்லை. இணையம் பரவலாகி வருகிற காலத்தில் கதை நடக்கிறது. அப்போது மவுசு கூடியிருந்தது சிடி டிவிதான்.*

*நீங்க சுமதின்னு ஒருத்தரைப் பற்றி எழுதியிருக்கீங்க. அவங்க அதே ஊரைச் சேர்ந்தவங்கதானா? நான் அவங்களைப் பற்றி தெரிஞ்சுக்க ஆசைப்படுகிறேன்.*

*சபாபதி, கோவை.*

*பதில்: செந்தில் கவுண்டமணியிடம் கேட்பது போல விலாசம் கேட்கிறீர்கள். உறுதியாக கதையில் வரும் விவரங்களைத் தவிர்த்து பிற விஷயங்களை நான் தரமாட்டேன். கூறவும் மாட்டேன். இன்றும் வாழும் அவர்களின் வாழ்க்கை இதனால் சிக்கலுக்குள்ளாகும் வாய்ப்பு உள்ளது.*

*மனோன்மணி*
*பிரதிலிபி வாசகர்.*

*தொடர்ச்சியாக அத்தியாயங்களை பாராட்டி எழுதினார்.* உத

*இந்தக்கதை நிறைய இடத்தில் ஜம்ப் ஆகுது. எனக்கு புரியவேயில்லை.*

*தோழர் பாலபாரதி.*

*நன்றி: ஆசான் கே.என்.சிவராமன் (முதன்மை ஆசிரியர், குங்குமம்), யுவகிருஷ்ணா (ஆசிரியர், வண்ணத்திரை, தினகரன் வசந்தம்), மெய்யருள், வடிவமைப்பாளர், கவிதா, பழனியம்மாள், கணியம் சீனிவாசன், பிரதிலிபி திலீபன், சபாபதி, மோகன்ராஜ், பாலபாரதி.*

உதவியவை

Zoho docs.com

Canva.com

Libre office

Ms Office

Nhm writer